A TAMIL

# DICTIONARY OF PROPER NAMES.

# சிறப்புப்பெயரகராதி.




சென்னை,

கிறிஸ்தவகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்

ஈக்காடு-இரத்தினவேலுமுதலியார்.


இயற்றியது.




பண்டித மித்திர யந்திரசாலை.

1908.


---

உ

கடவுள் துணை.

# முகவுரை.

முத்தமிழொருங்குணர்ந்த உத்தமப்புலவர்காள் !

வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலக
கத்து, ஆன்ற அறிஞராஞ் சங்கப் புலவரும், அங்கவர் பின்னரவதரித்
தவராய்த் தெய்வப் புலமைச் சீர்மிகக் கொண்டு, பன்னூலியற்றிய
தொன்னெறிப் புலவரும், யாவரும் பராவுறுந் தேவராஞ் சிவபிரான்
திருமாலாதியா பிரபாவங்களைப் பலர்க்கும் வெளிப்படுப்பானவ
தரித்த சைவசமயாசாரியர் ஆழ்வாராசாரியர் மதத்துவாசாரியர்
ஜைநதீர்த்தங்கரர் புத்தர்முதலிய மதகர்த்தரும் இயற்றிய இயலிசை
நாடகத்தமிழ் நூல்கள் எத்துணையென எத்தகையினரும் எல்லை
கூறற்கில்லையாகவும், அன்ன நூல்களிற் பன்னியவற்றையும் ; ஆரிய
பாஷையும் ஆந்திரபாஷையும் இத்தமிழ்நாட்டில் இக்காலத்து வழங்
குவனவாகலின், அவ்விருமொழியிற் பெருமிதமுற்ற பற்பல நூல்
களிற் பகரப்பட்டனவற்றையும் ஆதரவாகக்கொளீஇ ஒருவாற்றான்
வரையலாய இந்நூல் சிறப்புப்பெயர்களையே குறித்து விளக்குகின்
றமையிற் சிறப்புப்பெயரகராதியெனும் பெயர்த்தாயிற்று.

யான் ஆரிய ஆந்திர ஆங்கிலமொழிகளினுஞ் சிறிது பயிற்சி
ளவனாகலின், கலாசாலைபபாடமோதுதற்கண்ணும், பாரதாதி
தைநூல்கள் அவ்வவ பாஷை நூல்களோடு ஒவ்வோரணமயத்து
யையுமாறு நோக்கி, அந்நூல்கட்கும் நந்தமிழ் நூற்கும் உள்ள
வேறுபாடுகளை யெடுத்துக்கூறும் விநோத வழக்குடையனா யிருந்த
ஞான்று, பற்பல அற்புத சரித்திரங்களையெல்லாம் பலர்க்கும் பயன்
படுமாறு கோவையாக்கி ஒருநூல்செய்து நந்தமிழ்ப்பாஷையில்
வழங்குவித்தல் இன்றியமையாததெனுங் கருத்துட்கொண்டேனாகி,
பலநூல்களையும் வாசிக்குமாற்றானே வேண்டுவனவற்றைக்குறித்து
வந்தனன்.

அதுமுதல், யான் இந்நூல் செய்தலிலேயே வேணவாவுற்று,
கையிற்றொட்ட எந்நூலினுங் காணப்படு நாமங்களையும் அவற்றிற்
குரிய விஷய சங்கிரகத்தையும் அவ்வவ்வமையம் குறித்து வருவதி

லேயே யிலக்காயிருந்தனன். இளமையிற் பயின்ற பன்னூல்களையும் இதுக்காரணமாக மீண்டும் வாசித்தனன். சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலையாகிய வெளிவந்துள்ள பெருங்காப்பியங்களும் ; சூளாமணி யசோதரகாவிய முதலாகக்கிடைத்த சிறுகாப்பியங்களும் ; பத்துப்பாட்டு புறநானூறு முதலிய தொகைநூல்களும் ; ஸ்காந்தம் பெரியபுராணம் திருவிளையாடற்புராணம் கூர்மபுராணம் லிங்கபுராணம் பிரமோத்தரகாண்டம் காசிகண்டம் சைவபுராணமுதலிய சைவநூல்களும் ; வசவபுராணமுதலிய வீரசைவநூல்களும் ; தேவீபாகவதமுதலிய சாத்தேயநூல்களும் ; இராமாயண பாரதமெனும் இதிகாசங்களும் ; பாகவதபுராணம் விஷ்ணுபுராணம் காருடபுராணம் நாலாயிரப்பிரபந்தம் குருபரம்பரை முதலிய வைணவநூல்களும் ; பண்டைக்கால மன்னர் முதலினோர் சரிதைகளைக்கூறும் பொதுநூல்களும் ; இன்னோரன்ன பிறநூல்களும் ஆராய்ச்சிசெய்து அவ்வவற்றின் சிறப்புப்பெயர்களில் ஒவ்வொன்றனையும் எடுப்பதறகுற்ற பிரயாசம் இத்தகைத்தென ஈண்டெழுதற்கிடனின்று.

இந்நூலில், சுருதி ஸ்மிருதி புராணசாரங்கள் ; தேவர்கள் இருடிகள் அவதாரமூர்த்திகள் அசுரர்கள் முதலாயினோர் பிறப்புமுதலியன ; உலகிற்றோன்றிய சக்கிரவர்த்திகள் சேர சோழ பாண்டியர்கள் வடநாட்டரசர்கள சிற்றரசர்கள் வள்ளல்கள் பிரபல வித்துவசிரோமணிகள் சிவனடியார்கள் ஆழ்வார்கள் ஜைந பௌத்தமதாசாரியர்கள் முதலினோர் பிரபாவங்கள் ; மகிமைபெற்ற க்ஷேத்திரங்கள் நகரங்கள் பர்வதங்கள் நதி வாவி கூபாதி தீர்த்தங்கள் விருக்ஷங்கள் முதலியவற்றின் மகிமைகள் ; பல மதசித்தாந்தங்க. சைவ வைணவ ஸ்மார்த்த ஜைந பௌத்த மதநூல்கள் ; வைத் சோதிட இலக்கிய இலக்கண பூகோள ககோள முதலிய நூல்க அவ்வந்நூலாசிரியர்களாதிய இப்பெயர்கள் அவ்வப் பெயரினைப் பற்றி யுணரவேண்டிய சரித்திரவிஷயங்கள் ; பலநூல்களின் கருத்துக்கள் ; புராரி முராரி தாரகாரி சம்பராரி முதலிய பெயர்கட்குரிய புராணசரிதைகள் ; இவைபோன்ற பிறசரிதைகள் ; இன்னும் நந்தமிழ்நாட்டின ருணரவேண்டிய இன்றியமையாதன பலதிறப்பட வகுத்தெழுதப்பட்டிருப்பினும் விஸ்தார பயத்தையஞ்சி ஒருவாறு சுருக்கி வரைந்துளேனன்றி, அவ்வவ் வரிவடிவிற்கு வேண்டிய அம்சங்கள் எவ்வாற்றானுங் குறைந்திராவெனத் துணிந்து கூறமாட்டேன்.

கடவுள் துணை.

# சிறப்புப்பெயரகராதி.

## கடவுள்வணக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உலகெலாந் தனதின் னருட்கொடு பரந்தே யுத்தமர் நெஞ்சகத் தொளிரும்
பலகலை நவின்ற பழைப்பனர் குழாங்கள் பரசினர்க் கருள்புரிந் தாங்கா
ஙிலகுபன் மதத்தோ ரெவ்வெவா றிறைஞ்சி யேத்தினு மவரவர் துதிகொண்
டலகிலவ் வாறே யருள்குரு பரன்ற னடிமலர் முடிமிசை யணிவாம்.



## அ

அககமலாசனன்—ஈசுவரன் கடவுள். [இதய தாமரையைப் பீடமாகக் கொண்டவன்]

அகசன்—கேது.

அகஜாதை—பார்வதி [பர்வத ராஜ குமாரி]

அகடித கடனா சாமர்த்தியன்—கடவுள். [செய்தற்கேலாத கருமங்களையுஞ் செய்ய வல்லவன்]

அகட்டுத்தே—விநாயகர் [பெருவயிற்றினையுடைய கடவுள்]

அகணிதலோசனன்—இந்திரன் [எண்ணிறந்த விழிகளையுடையவன்]

அகணிகாயகன்—இந்திரன் [மருதநிலத்திற் கிறைவன்]

அகண்டதரன்-துரியோதனன்சகோதரருளொருவன்.

அகண்டன் } (1) புத்தன் (2)
அகண்டாகண்டன் } அருகன் (3) பிரமன் (4) [illegible] (5) சிவன்.

அகண்டாகாரவிருத்தி—அஞ்ஞானத்தைநிவர்த்தித்துஜீவசாக்ஷியத்தைத் தோற்றுவிப்பதில் ஐயந் திரிபு அறியாமை யென்னு முக்குற்றங்களை யகற்றிக் கடாவிடைகளால் நன்கு விளக்கவல்ல ஒரு வடமொழி வேதாந்த நூல்.

அகண்டாநந்தர்—(1)பௌத்த முனிவர். இவர் பொதிகையில் நெடுங்காலம் வசித்திருந்து பலர்க்கும் பௌத்தமதோபதேசஞ் செய்தவர். (2) லக்ஷ்மீ ஸ்தோத்திரமுதலியன செய்த ஒரு வடமொழிப் புலவர்.

அகஸ்திய பக்தவிலாசம்—சிவனடியவராய அறுபான்மும்மை நாயன்மார் சரித்திரங்களைக் கூறும் ஒரு வடமொழிநூல். இது தமிழிலுள்ள பெரியபுராண சரிதம் போல்வது. இதன் பிந்திய நூலாக இதுபோலவே உபமந்யு பக்தவிலாசமென்னும்

பெயரிய வடமொழி நூலொன்றும் நிலவுகின்றது.

அகஸ்தியபண்டிதன்—பாலபாரதமெனப் பெயரிய நூலை வடமொழியிற் செய்தவன்.

அகத்தியம்—அகத்தியமுனிவர் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத் தமிழென்னு முத்தமிழிற்கும் பொதுப் படவியற்றிய ஒரு பேரிலக்கணம். இதின்சிற்சில சூத்திரங்களே பண்டையுரை நூல்களிற் காணப்படுகின்றன. இந்நூல் மறைந்தது

அகஸ்தியர்—ஒரு மகாருஷி. சப்த விருடியரி லொருவராகச் சொல்லப்படுபவர். மகாதவசி. ஒருகாலத்திற் கடற்கரையிலிருந்த மித்திராவருணர் என்பவர்கள் ஊர்வசியென்னும் அப்சரசைக்கண்டு காமமீக்கூர்தலின் தமது வீரியத்தை ஒருவன் கும்பத்திலும் ஒரு பன் ஜலத்திலும் விடுப்ப, ஜலத்தினின்று வசிட்டரும் கும்பத்தினின்று அகத்தியருந் தோன்றினரென நூல்கள் நுவலும். இதனால்அகஸ்தியர் கும்பயோனி கும்பசம்பவர் கும்பமுனி குடமுனி முதலிய திருநாமங்களை யெய்தினர். [இவர் பிரமமானத புத்திரரு ளொருவரென்றும், வெவ்வேறு வகையிற் பிறந்ததாகவும் நூல்கள் பலவகையாகக் கூறும்]

சந்திர வமிசத்தில் புரூரவன் பௌத்திரனும் ஆயுவின் புத்திரனுமாகிய நகுஷனை (இந்திரன் பிரமஹத்தியால் தன் பதவியைய யொழிந்திருந்த காலத்தில்) தேவர்கள் இந்திரனாக நியமனஞ்செய்ய, அந் நகுஷன் நன்கையர் சரசத்திலே நாளும் பயின்றவனாகலின், புலோமசையிடஞ் செல்வான் புறப்பட, சத்த விருடியர் வழக்கப்படி அவனைச் சிவிகையூர்த்துவரத் தாங்கிச் செல்லுகையில், அன்னவன் தன்னைத் தாங்குவோர் சத்த விருடியரெனச் சிறிதுஞ்சித்தங் கொள்ளாது விரைவிலவனையடையக் கருதி "சர்ப்ப சர்ப்ப" [விரைக விரைக] என்கூற, இவர் அவ்விருடியருள் முற்படநின்று சென்றுகொண்டிருந்தமையின் "நீசர்ப்பமாகுக" எனச் சபித்தவர்.

உமாதேவியார் இமாசலபுத்திரியாராகத் திருவவதாரஞ் செய்தபொழுது அத்திருமணத்தைத் தரிசிக்க வந்த திரண்ட தேவா முனிவர் தொகுதியால் வடமுனை தாழ்ந்தும் தென்முனையுயர்ந்தங் கேடு விளைவதாயிருந்தமையின், சிவபெருமானல் இவர் தென்றிசை நோக்கிச்சென்றிருப்பின் உலகுசமநிலையடைந்து பண்டுபோல் விளங்குமெனக் கட்டளையிடப் பெற்றார்.

இவரே விந்த மலையைத்தாண்டித் தக்ஷிணதேயஞ் சென்ற ஆரியருண் முதல்வர். இவர் தென்னாடு செல்லுகையில் தாய்செல்லும் நாட்டின்பாஷையாகியதமிழின் அருமை பெருமைகளை யறியச் சிவோபதேசம் பெற்றும் அவர் பிரசாதித்தகங்கையைக் கமண்டலத்திற் கொண்டும், ஜமதக்கினிமுனிவர் புத்திரரான திரணதூமாக்கினி யென்னுந்தொல்காப்பியனாரை அவர்பாற் கேட்டுச் சீடராகப் பெற்றும், அரசிளங்குமரர் பலரை உடன்கொண்டுஞ் சென்று தக்ஷிணத்தைக் காடு திருத்தி நாடாக்கி அம்மன்னர்க்கு

வழங்கிப் பொதியையி லிருந்தவர்.

தென்றிசை நோக்கிவருகையில் நாரதர் சூழ்ச்சியால் மேருமலையோடு இகல்கொண்ட விந்த கிரியையடைந்து அஃது இறுமாந்து அண்டமுகட்டினையளாவி நின்றமையின் தமக்கு வழிவிடக்கேட்க, அஃது அங்ஙனம் புரியாமையின் தமது கையினைப் பிரமபதம் வரையிலுயர்த்தி அதனுச்சியிலூன்றி நிலத்தோடழுத்தியவர்.

இவர் தென்றிசை நோக்கி வருகையில் இவர் பிதிரர் அநேகர் மரத்தில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருந்தமையின் அவர்களைப் பார்த்து நீங்கள் ஏன் இப்படி கஷ்டப்படுகிறீர்களென்று இவர் வினவ, அவர்கள் எங்கள் வமிசத்தில் ஒருவன் அகத்தியனெனத் தோன்றி இல்லறமமேற் கொள்ளாதிருத்தலின் எங்களுக்கு இந்தக் கஷ்டம் நேரிட்டதென, தம்மைச் சபியாதபடி அவர்களை மிகுதியும் பிரார்த்தித்து, யானே அவ்வகத்தியன் அதிவிரைவில் மணவினை செய்து கொள்ளுவேனென்று கூறி விடைகொண்டு, விதர்ப்ப நாட்டையடைந்து அவ்வரசன் யாகத்திற் குமாரியாகப் பிறந்த உலோபாமுத்திரையை மணவினைமுடித்துப் பிதிர்த்தர்ப்பணஞ் செய்து தம்முன்னோரைமுத்தியடையச் செய்தவர்.

வழியிற் செல்வோரைவிருந்திற் கழைத்து வஞ்சனையாற் கொன்று தின்றுவந்தவில்வலன் வாதாவி [சூரபன்மன் தங்கையாகிய அஜமுகி துர்வாசமுனிவரைக்கூடிப்பெற்ற மக்கள்] என்போரில் வில்வலன் முனிவனாகவும், வாதாவி மேடமாகவும வழக்கப்படி யுருக்கொண்டு விருந்திற் கழைத்து மேடத்தைக் கறியாக்கி யுண்பித்து எதிர்நின்று வாதாவியைவிளிப்ப, அவன் ஆட்டுருவேற்று வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளிவர யத்தனிப்பதுணர்ந்து சடரத்தைத்தடவி அவனை ஜீர்ணஞ் செய்வித்தவர்.

வில்வலன் தன்றம்பியிறந்தமைக்காகப் பெரிய தொருமரத்தினைப் பறித்து அடிக்கப்புகுகையில், கையிலிருந்த தருப்பைப் புல்லினைச் சிவாஸ்திரமாகப்பாவித்து விடுத்து அவனைக் கொன்று, [இவ்விருவரும் துருவாசமுனி மைந்தர்களாதலின்] அவரைக் கொன்றதாற் பிரமஹத்தியணுகாவகையாகக் கொங்குநாட்டிற்கருகே சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்தவர்.

திருவேங்கடமென்னும் நாகாசலத்தில் எமதிறைவனன் ஸ்ரீகுமாரக் கடவுளின் திருவருளுபதேசம் பெற்றவர்.

திருக்குற்றாலத்தை யடைகையில் தமது சிவசின்னங்களைக் கண்டு ஆங்குற்றவைணவர்கள் தூஷிக்க ஆண்டிருந்து புறம்போந்து வைணவவடிவமாய் மீண்டுஞ் சென்று, அவர்களை உபசரித்து 'விஷ்ணுமூர்த்தியைப் பூசித்துச் செல்க' என வேண்டப்பெற்று "அராவுமதிநதி புனையுஞ்செஞ்சடை யெம்பெருமானை யகத்துட்கொண்டு, சிறுகு முருவுடையமுனி நாரணனார் திருமுடிமேல் செங்கைவைத்தே, குறுகு குறுகெனவுரைத்தே. பொன்னரங்கிற் பனைபாகைக் கோலமீதுற

குசழலுற்றொன்னக்குழைவித்தோர் சிவலிங்க வடிவஞ் செய்தான்"— கந்தபுராணம் - என்றபடி சிவலிங்கப் பெருமானுக்கி, பொதிகையடைந்தவர்.

இந்திரன் தன்னுடன் போர்புரிதற்கேலாது கடலிற்பதுங்கிய கள்வனாகிய விருத்திராசுரனைக் கொல்லத் தம்பாற்செய்த வேண்டுகோளின்படிகடல்நீரைஉழுந்தளவாக்கி அங்கையிலேற்று ஆசமனஞ் செய்து அவ்விருத்திரனை வெளிப்படுத்தியவர். இதனை "கைதவன் கரந்துவைகுங் கடலை வெற்படக்குங்கையிற், பெய்துழுந் தெல்லைத்தாக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி, ஐயனதருளைப் பெற்றோர்க் கதிசயமிதென்கொனென்று, வையமுததொழிலுஞ் செய்ய வல்லவரிவரேயன்றோ"—என்பதனுணர்க. இது வாலகில்லியருக்காக நிகழ்ந்த தெனவும் புராணங்கள் கூறும்.

ஸ்ரீராமருக்குச் சிவகீதையை யுபதேசித்துப் பாசுபத விரதானுஷ்டான பராக்கி இராவணனை வெல்லுமுபாயம் போதித்துத திவ்வியாஸ்திரமளித்தவர்.

சுவேதனுக்குப் பிணந்தின்னுஞ் சாபத்தையொழித்தருளினவர்[உத்தரராமாயணம்.]

இவர் வழியே வருகையில், விண்டு பக்தி மிக்கவனாய இந்திரத்துய்மனென்னும் பாண்டியன் இவர்க்கு வந்தனை வழிபாடு செய்யாது, யோகத் திருந்தமையின் வெகுண்டு யானையாருக வெனச் சபித்தவர். இவனே கஜேந்திரனென்னும்விஷ்ணுபக்தனாயவன்.

சுந்த னென்பவனைக் கொன்றமைக்காக அவன் மனைவி தாடகை இம்முனிவரால் தன் கணவனிறந்தமை கருதி அவரைப் பல வகையில் துன்புசெய்து வர, அவளை அரக்கியாகச்சபிததவா.

இவர் ஒரு தலத்திற்குச் சென்றபொழுது திருக்கதவ மடைக்கப்பட்டிருந்தமையின்,வண்டுருபமேற்று மலர்கடோறுந் திரிந்து தேனைச் சேகரித்துச் சிவபூசை செய்து,அதனை ஈங்கோய் மலையெனவழங்கச செய்தவர்.

இந்திரன் சீகாழியில் வைத்த நந்தவனமானது மழையின்றி வாடுவதால் மனம வருந்தி விநாயகக் கடவுளைத் தோத்திரஞ் செய்து வேண்ட, அகஸ்தியமுனிவர் கவேரகிரியிலிருக்கையில் அக்கணேசமூர்த்தி காகவுருவேற்றுக் கமண்டலத்தைக் கவிழ்ப்ப, அது காவிரிநதியாகப் பெருகி இந்திரன் மனத்தையும் நந்தவனததையும் செவ்வை செய்து புண்ணிய நதியாயிலங்கியது.

கவேரகன்னியான காவேரியென்பவளை அகத்தியமுனிவர் மணஞ்செய்து கொண்டு அவளைப் பிரியேனெனக் கூறி ஒருநாள் சந்திமுடிக்கச் சிறிதுநேரம் ஒரு தீர்த்தத்திற்குச் சென்றிருந்தபொழுது அவள் ஒரு குளத்தில் வீழ்ந்து காவேரி நதியாய்ப் பிரவகித்தவந்தாளெனவும் சரிதை யுண்டு.

கற்பின்விக்கிரகமாகியஉலோபாமுத்திரையை இராவணன் கண்டு மோகித்து எடுத்துச்செல்ல யத்தனிக்கையில், அவளைப் பாத்தாற்

பிணித்துத் தண்டத்தாற்புடைத்து 'வடவேங்கடந் தென் குமரியாயிடைத் தமிழ் வழங்கு நல்லுலக'மென வரையறுத்த தமிழ் நாட்டிலிராவணம் போக்கியவர்.

பண்டைக்காலந் தொட்டு வழங்கி வந்த தமிழ்ப்பாஷையைச் செவ்வை செய்யக்கருதி அகத்தியமெனத்தம் பெயரால் மிகப் பெரிய அரிய முத்தமிழிலக்கண மொன்றும், நீதிநூல் சோதிடநூல் வாகடநூல் முதலியனவற்றையுஞ் செய்து, மதுரையிலிருந்த காய்சினவழுதியின் அவைக்களத்தே யரங்கேற்றியவர். இவரே முதல்வராகவீற்றிருப்பக் காய்சினவழுதி சங்கமமைத்துத் தமிழாராயப்புகுந்தான். அது தென்மதுரை. கடல்கொள்ளப்பட்டது. அச்சங்கம் நெடுநாள் நிலவிநின்றது. அதுவே தலைச்சங்கம் [சங்கத்தினைப்பற்றிய விடயங்களைப் பின் வருமிடத்திற் கண்டு கொள்க.]

அகத்தியனாரியற்றிய பெரிய முத்தமிழிலக்கணமான அகத்தியம் அநேக நூற்றாண்டுகட்கு முன்னரே மறைந்தொழிந்தது. ஆயினுஞ் சிற்சில சூத்திரங்கள் புராதன உரையாசிரியர்களெடுத்துக் காட்டிய மேற்கோள்களிற் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் தொல்காப்பியனார் சாபமென்றும், அகத்தியனாருந் தொல்காப்பியனாருந் தம்முட்பகைத்துக் குருத்வம் சீடத்வம் நீக்கிக் கொண்டனரென்றும் தொல்காப்பியப் பாயிரச் சூத்திரத் துரையில் நச்சினார்க்கினியர் வரைந்தனர். அஃதங்ஙனமோ, தொல்காப்பியத்திலும்பர நத நூல்களின்; தொல்காப்பியங் கற்கப் பெற்றபின் அகத்தியங் கற்போரின்றி யிறக்கநேர்ந்ததோ வென வெண்ணக்கிடக்கின்றது.

அவரியற்றியதாக வைத்தியம் சோதிடம் பஞ்சபக்ஷி கருக்கிடைஞாலமுதலிய பல நூல்கள் இக்காலத்தில் அச்சுப்பிரதிகளாகவும் ஏட்டுப் பிரதிகளாகவுங் காணப்படுகின்றன. அவற்றிற் கூறப்படும் விடயங்களை ஆய்ந்தறிந்தார் உண்மை பிசகெனச் சொல்லக்கூடுமாயினும் அவ்வகை நூலாராய்ச்சியில்லாத கல்விவாணரொருவரும் அகத்தியருடைய நூல்களென ஒரு சிறிதும் எண்ணுதற் கிடனின்றி அடிதொடைமோனை யிலக்கண வமைதியில்லா வெறும்பாடல்களாக நிற்கின்றன. [இது திருவள்ளுவ நாயனார் ஞானவெட்டி பாடல் செய்தாரெனச் சொல்வார்கூற்றுப்போலு மிருக்கின்றது]

அகத்தியர்நக்ஷத்திரம்— இஃது ஆகாயத்திற்கட்புலனாயின், கடலலைநிற்கு மெனச் சாத்திரங் கூறும்.

அகத்தியர் மனைவியார்— உலோபாமுத்திரையார் இலாக்ஷிதர்ப்ப ராஜகுமாரியென்றும், புலத்தியர் தங்கையென்றுஞ் சொல்லப்படுகிறார். இவர் கற்பின் மேம்பட்ட கன்னிகையார், இவரைக் காமுற்றுக்கொண்டுபோவான் கருதிய இராவணன் அகத்திய முனிவராற்றக்கபடி தண்டித்துத் தமிழ் நாட்டிலிராவணம் போக்கப்பட்டான்.

அகத்தியர் மாணவர்கள்— திரணதூமாக்கினி [தொல்காப்பியர்,] அதங்கோட்டுமுனிவர், துராலிங்கர், செம்

பூட்சேய், வையாபிகனார், வாய்ப்பி
யனார், பனம்பாரனார், கழாரம்ப
னார், அவிநயனார், காக்கைபாடினி
யார், நற்றத்தனார், வாமனனாரெ
னும் பெயர்கொண்ட பன்னிருவர்.
இவரியற்றியன பன்னிரு படல
முதலிய பன்னூல்கள் தொல்காப்
பியனாரியற்றியது தொல்காப்பியம்

அகத்திய வேளாளன்— இவன் அகத்
தியர் பெயரையே தனது இடுகுறிப்
பெயராகக் கொண்ட ஒருவன். அக
த்திய முனிவர் செயதருளிய வாக
டம் சோதிட முதலிய புராதன
நூல்கள் மறைந்த பின்னர் அவற்
றினைப் பலபடவியற்றிப் பலரும்
இக்காலத்து அகத்திய முனிவர் நூ
லென்றும் அன்றென்றும் விவாதி
க்க இடந்தந்தவன், ஆயினும் இவன
புத்திமானென வெண்ணத் தக்க
வனே.

அகத்தீசர்—(1) திருவகத்தியான் பள்
ளியிலெழுந்தருளி யிருக்கும் சிவ
பெருமானுக்குரிய திருநாமம் (2)
அகத்தியமுனிவரால் பிரதிட்டை
செய்யப்பட்ட தலங்களிலெல்லாம்
சிவபெருமானுக்கு வழங்கும் திரு
நாமம்.

அகநானூறு—இஃதகப்பொருட் பகு
திகளையே பொருளாக வுடைய
தோர் நூல். இது நானூற்றொரு
அகவற்பாக்களையுடையது. பாரதம்
பாடிய பெருந்தேவனாரால் கடவுள
வாழ்த்தும் மாமூலனார் முதல்
உலோச்சனா ரிறுதியாயுள்ள பல
புலவரால் வினைய நானூறும் இயற்
றப்பட்டன. கடவுள் வாழ்த்து நீங்
கிய நானூறு பாக்களில் 120களிற்றி
யானைநிரை யெனவும், மேலுள்ள
180-மணிமிடைப்பவள மெனவும்
மேலுள்ள 100-நித்திலக் கோவை
யெனவும் பெயர் பெறும். இதனை
த்தொகுத்தான் மதுரை உப்பூரி
கிழான் மகன் உருத்திர சன்மன்,
தொகுப்பித்தான் பாண்டியன் உக்
கிரப்பெருவழுதி. இஃது அகம்.
அகப்பாட்டு, நெடுந்தொகை யென
வும் கூறப்படும்.

அகப்பேய்ச்சித்தர்—தம்மனம் பேய்
போ லலைதல் நோக்கி அதைப்பே
யென விளித்து முன்னிலையாக்கி
அலையற்கவென வற்புறுத்திப் பாடி
யவர்.

அகப்பொருட்கோவை—ஒரு பிரபந்த
த்தின்பெயர். கோடீச்சுரகோவை
தஞ்சைவாணன்கோவை வெங்கை
க்கோவை முதலியனவும் அகப்பொ
ருட் கோவைகளே.

அகப்பொருளிலக்கணம்—அகப்பொ
ருட் பகுதிகளை விரித்துக் கூறும்
நூல். இறையனார் அகப்பொருள்,
நாற்கவிராஜ நம்பி அகப்பொரு
ளென்றித் திறத்தன.

அகமருஷணம் —(1) நீரில் மூழ்கு
கையிற் கும்பித்துஜபிப்பதோர் ஆரி
யமந்திரத்தின் பெயர். இதனைச்சிவ
பாதவிதயர் ஜபித்துக் கொண்டிருக்
கையிலே தான் ஆளுடையபிள்ளை
யார் தமது பிதாவைக்காணாது மன
ங்கலங்கிப் பரமபிதாவையும் மாதா
வையுந்தரிசித்து ஞானப்பாலுண்டு
திருஞான சம்பந்தராயினர் (2) விந்
தமலைக்கருகிலுள்ள ஒரு தீர்த்தம்

அகமருஷணன்—இக்ஷ்வாகு வமிசத்
துச் சந்தியின் மகன்.

அகம்பன்—ராக்கதன். சுமாலி மகன்.
கரனுக்கு மந்திரி. கரதூஷணாதியர்

இராமனால் ஜன ஸ்தானத்திலே கொல்லப் பட்டதை இராவணனுக்குத்தெரிவித்தவன். இராமர் இலங்கையை முற்றுகை செய்தகாலத்தில் மேலைக்கோட்டை வாயிலைக் காத்து நின்று அநுமனாற் கொல்லப்பட்டவன்.

அகம்யாதி—(பு)சம்யாதிமகன். இவன் கார்த்தவீரியார்ச்சுனன் தங்கையாகிய பாநுமதியை மணந்தவன்.

அகர்க்கரன்—கத்துருமகன்.

அகர்த்த விருஷ்ணர்—உரோமகர்ஷணர் சுகர் இவர்களுக்கு மாணாக்கர்.

அகர்ப்பதி } சூரியன்.
அகர்மணி }

அகலியை—அஹல்யா: பஞ்சகன்னிகைகளு ளொருத்தி, முற்கலமுனிவர் குமாரி, கௌதம முனிவர் பாரியை, சதானந்த முனிவர் தாய். இவள் கட்டழகுடைமையை இந்திரன் கண்டு ஆவகறைசகு முற்படச்சேவலுரு வேற்றுக்கூவ, பொழுது புலர்ந்ததெனக் கருதிக் கங்கைக்குச் சென்றமையின் அவளைக் கௌதமவடி வேற்றுவஞ்சனையாகப் புணர்ந்து செல்வதைக் கௌதமருணர்ந்து அவளைக் கற்பாறையாகவும் இந்திரனை உடன் முழுதும் யோனிவடிவாகவுஞ் சபித்தனர். அகலியை நெடுங்காலம் பாறையாய்க்கிடந்து அவ்வழிவந்த இராமர் திருவடிப் பரிசத்தால் பண்டையவுருவேற்றனள். இந்திரன் விடயமாகத்தேவர் வேண்டுகோளுக் கிரங்கி அவன் கண்கட்கு யோனிரூபமாகவும் பிறர்கண்கட்குக் கண்வடிவமாகவும் புலப்படச்சாபா நுக்கிரகஞ்செய்து விடுத்தனர். இவ்வகலியை பாற்கடலிற் றோன்றினவளென்றுஞ் சில நூல்கள் கூறும்.

அகளங்கன்—(1) சிவன் (2) திருமால் (3 பிரமன் (4) அருகன் (5) புத்தன் [களங்கமற்றவன்.]

அகனிஷ்டன்—புத்தன்.

அகன்—அஷ்டவசுக்களி லொருவன். சோதியென்பானுக்குத் தந்தை.

அகாசுரன்—பகாசுரனுக் கிளவல், இவன் பெரிய மலைப்பாம்பு வடிவாகி அங்காந்த வாயுடன் கண்ணனை விழுங்கத்தொடங்குகையில் கண்ணன் கண்டத்தளவு உட்புக்குப் பேருரு வேற்றுக் கிழித்தெறிய விறந்தவன்.

அகாரத்திரய வித்தை—பஞ்சாக்கர வித்தைகளுளொன்று.

அகாரி—இந்திரன்.

அகி—(1) சூரியன் (2) இராகு (3) ஒரு நக்ஷத்திரம் (4, விருத்திராசுரன்.

அகி க்ஷேத்திரம்—உத்தர பாஞ்சாலதேசத்தின் இராஜதானி நகரம்.

அகிபதி—ஆதிசேடன்; சர்ப்பராஜன்.

அகிபுஜன்—கருடன். திருமால்வாகனம் [பாம்பைத் தோளிலுடையவன்.]

அகிரன்—சூரியன்.

அகிலாண்டேசுவரி--திருவானைக்காவிலெழுந்தருளியிருக்கும் உமாதேவியாரது திருநாமம்.

அகிலேசன்—(1) காசிப்பதியிலெழுந்தருளிய சிவபெருமான் திருநாமம் (2) திருவாரூரிலிருக்குஞ்சிவபெருமான் திருநாமம்.

அகிலேச்வரி—திருவாரூரில் உமையம்மையாருக்குவழங்குந்திருநாமம்

அகீநகு—தேவானீகன் மகன், குருவின் பிதா.

அகுலத — பரிசிலர்க்கு யானைகள் கொடுத்த கொடையாளி, போர்புரிதலில் வல்லவன், மதுராபுரவாசி, இவனைப்பாடிய புலவர் கபிலர்.

அகோபிலம் — தொண்டை நாட்டிற்கு வடமேற்கிலுள்ளதொரு வைணவமடம்.

அகோரசிவாசாரியர் — ஒரு பத்ததியும் மிருகேந்திராகமத்திற்கு உரையும் இயற்றியவர். பத்ததிகள் பதினெட்டனுள் இவர் செய்த பத்ததியும் வாமதேவ பத்ததியுமே மிகுவழங்கும். [பத்ததி — சைவக்கிரியா க்ரமங்களைப் பற்றிக்கூறும் நூல்] இவர் சிதம்பரத்திலே ஜனித்து ஆங்கேயே சமாதிகொண்டவர்.

அகோராஸ்திர மூர்த்தி — சத்தரந்து என்போன் தக்கனைப்போலச் சிவபெருமானையிகழ்ந்து யாகஞ்செய்ய, திருமாலாதி தேவர்கள் தடுப்பவுங் கேளானாய் நடத்திய அத்தீயோன் வேள்வியை யழித்தருளின சிவமூர்த்தம். இவ்வரலாற்றினை:—"தக்கனைப்போ லோர்வேள்வி தான் செய்யத் தேவரெல்லா, மிக்கவவியுண்ணவந்த வேலையின்கண் — அக்கணமே, விண்டலமே தேராக மேதினியே வண்டிலெனக், கொண்டிழுக்கும் வாயு குரகதமாய் — மண்டும், அனலே சிலையாக வம்புலியே நாணாய்ப், புனலே யடுசரமாப் பூட்டி — சினவடிவேல், சேனாபதிதானே தேர்கடவிச் செல்லவெதிர், வானோர்கள் கண்டு மருண்டோட — ஆனதக, இந்திரனை மாலயனையீசானு சூரியரைச், சந்திரனை மாதவரைத்தாக்கியே - வெந்திறல்சேர், அந்த மகமுமடாத்து வருஞ்சத்ச, தந்துவையு மாய்த்த தகை போற்றி" எனவருவதனாலுணர்க.

அக்கபாதன் — ஒரிருடி. வடமொழியில் நியாயசாஸ்திரஞ்செய்த கௌதமன், இவன் காலிற்கண்ணுடைமையின் இப்பெயர் பெற்றனன்.

அக்கமாலை — அருந்ததிநக்ஷத்திரத்திற்கொருபெயர்.

அக்கரரூபி } சிவன். ஒலிமயமாக விளங்க
அக்ஷரசொரூபன். }

லின் இப்பெயரேற்றனன் அது யாங்ஙனமெனின், "அகாரம் - சிரம், ஆகாரம் - நெற்றி, இகாரம் - வலக்கண், ஈகாரம் - இடக்கண், உகாரம்-வலது செவி, ஊகாரம்-இடது செவி, ருகாரம் - வலது கன்னம், ரூகாரம்-இடது கன்னம், லுகாரம்-வலது நாசி, லூகாரம்-இடதுநாசி, ஏகாரம் - மேலுதடு, ஐகாரம்-கீழுதடு. ஓகார ஔகாரங்கள்முறையே மேலுங்கீழுமுள்ள பல்வரிசைகள், அம் - வலது தாடை, அः-இடது தாடை, க ச ங ஞ ஈ என்னும் பஞ்சாக்ஷரங்கள் வலப்புறத்தைந்து திருக்கரங்கள், ச ஊ ஐ ஐ ஞ என்னும் பஞ்சாக்ஷரங்கள் இடப்புறத்தைந்து திருக்கரங்கள், ட ○ ஒ ஒ ண என்னும்பஞ்சாக்ஷரங்கள் வலது கால், த ய ஓ ய ந என்னும் பஞ்சாக்ஷரங்கள் இடதுகால், பகாரம் - வயிறு, ஃகாரம் - வலப்பக்கம், வகாரம் - இடப்பக்கம், ஃகாரம் - தோள், மகாரம் - மனம், ய ர ல வ ஶ ஷ ஸ என்னும் எழுத்துக்கள் முறையே இரஸம் உதிரம் மாமிசம் மேதஸ் என்பு மஜ்ஜை சுக்கிலம் என்னும் ஸப்ததாதுக்கள், ஹகாரம் - தொப்புள், க்ஷகாரம்-நாத

மென்று சொல்லப்படும். இப்படி விளங்குதலின், பகவா னுடைய சொரூபமானது ஸப்தமயரூபமாம் ஆகவே "அகாராதிக்ஷகாராந்த நாத ரூபாயதே நமஃ" என்ப் பிரதிபாதிக்கப்படுகிறான்.

அக்கன் / அக்ஷன் — இராவணன் மகன். சீதையைத் தேடிச் சென்றபொழுது அனுமனால் கொல்லப்பட்டவன்.

அக்ஷயபாத்திரம்—தருமன் சூரியனிடத்தேபெற்ற தொருபாத்திரம். இது வற்றாத்தன்மையின் இப்பெயர் பெற்றது. எத்தொகையினர்க்கும் முட்டின்றி உணவளிக்க வல்லது.

அக்ஷயலிங்கேசர்—திருக்கீழ் வேளூரில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

அக்காரக்கனி நச்சுமனார்—கடைச்சங்கத துவிளங்கியவொருபுலவர். இவர் உக்கிரப் பெருவழுதி அவைக்களத்து இருந்தவர். திருவள்ளுவமாலை சொல்லியவர்களு ளொருவர்.

அக்ஷித்திரயம்—மீனாக்ஷி, காமாக்ஷி, விசாலாக்ஷி யெனப்படுவோர்.

அக்கி / அங்கி / அக்கினி — அக்கினி தேவன், அட்டதிக்குப்பாலகரு ளொருவனாகிய தென்கீழ்த்திசைக் காவலன், இவன் வாகனம் ஆடு, மனைவி சுவாகாதேவி, இவன் மூன்று கால்களையுடையவன், மகாகாமி, எஞ்சியவிடயங்கள் அக்கினி தேவனிற் காண்க.

அக்கிஜுலி—குமாரக்கடவுள்.

அக்கிரஜன்மன்—பிரமன். [முதலிற் சனித்தவனென்பது பொருள்]

அக்கினிகருப்பை—பூமகள்.

அக்கினி குமாரன்—குமாரக் கடவுள்.

அக்கினி கோத்திரபட்டர்—ஒருவடமொழிப்புலவர். ஆந்திரதேயத்திருந்தவர்.

அக்கினிக்கண்ணன்—(1) சிவன் (2) ஓரசுரன்.

அக்கினி சயலம்—யாகஞ் செய்வித்தோன் பெறும் பயனைத் தபனனும் அக்கினிபுத்திரர் பதினெழுவரும் அபகரித்துக் கொள்ளுதலின் பரிகாரமாகச் செய்யப்படுவதோர் யாகம்.

அக்கினிஜன்—குமாரக்கடவுள்.

அக்கினி சுவோத்தர்—பிதிரர்களில் ஒரு பிரிவினர்.

அக்கினிதேசியன் / அக்கினிவேசன — ஓரந்தணன்—சதுர்வேதத்தில் வல்லவன். இவனே துரோணாசாரியருக்குத் தநுர்வித்தை கற்பித்த ஆசிரியன்.

அக்கினிதேவன்—அட்ட திக்குப்பாலகருளொருவனதென்கீழ்த்திசைக்காவலன். இவனைப் பிரமபுத்திரனென்றும்காசிபபுத்திர னென்றும் நூல்கள் மாறுபடக்கூறும். இவனுக்கு இரண்டு முகமும் எழுநாவும் மூன்றுகாலும் ஆட்டுக்கடாவாகனமுமாம். மனைவி சுவாகாதேவி; புத்திரர்-பாவகன் பவமானன் சுசியெனப்பெயரிய மூவர். இவனுக்கிராஜதானி தேஜோவதி. அர்ச்சுனன் தனக்குப் பெரியதோராகாரமளித்த நன்மைக்குப் பிரதியாகக் காண்டீபங்கொடுத்தவன். சிவவீரியத்தைப் புறாவடிவேற்றுத்தாங்கிக் கங்கையில் விட்டவன். சீதாதேவி சாபத்தால் சர்வபக்ஷகனானவன். அக்கினி மண்டலத்தி லிருப்போர் அக்கினி தேவர்த் தெனப்படுவர். அவர்கள்

அன்லரென்னும் பெயருடையாரற் பத்தொன்பதின்மர். அவருள் அபிமானக்கினி யெனப்படுவோன் தலைமையன். அவன் புதல்வரே மேற்கூறிய பாவகன் பவமானன் சுசி யெனப்படுவோர். அம் மூவர்க்கும் நாற்பத்தைந்து புதல்வருளர்.

அக்கினி, திரேதாக்கினி யென்றும் பஞ்சாக்கினியென்றும் இருவகைப்படும்: அவற்றுள், திரேதாக்கினியானது காருகபத்தியம் ஆகவநீயம் தக்ஷிணாக்கினியென முத்திறப்படும். அவை முறையே மேற்கு கிழக்கு தெற்கு ஆகியதிசைகளில் வேதியிலிடப்படுவன. இனி, பஞ்சாக்கினி அம்மூன்றனோடு சவ்வியம் அபசவ்வியமென ஐவகைப்படும். இவ் அவ்விய சவ்வியங்கள் ஈசானதிக்கில் வேதியிலிடப்படுவன. இவற்றின் விரிந்த விடயங்கள் ஆகமங்களிற் கண்டுணர்க.

அக்கினிதன் அநந்தசக்திகளால் சூரிய சந்திரரிடத்திற் சோதியாகவும், மேகத்தில் மின்னலாகவும், பூமியில் தீயாகவும், சமுத்திரத்தில் வடவாமுகாக்கினியாகவும், ஸர்வஜீவராசிகளிடத்திலும் ஜடராக்கினியாகவுமிருந்து சகல லோகங்களையுங் கணப்போதிலே தரிசித்து மீளுந் தூதென மகாவிருடியர் வேதத்தில் துதித்துளர்.

அக்கினித்யோதன்—ஓரந்தணன். இவன் கண்ணன்பால் மணம்பேசிச் சென்ற உருக்குமிணியின் தூதன்.

அக்கினி புத்திரன்—(1) குமாரக்கடவுள். (2) சுசி-பாவகன் - பவமானனெனப் படுவோர்.

அக்கினி புராணம்—அக்கினி சம்பந்தமான புராணம். இது ஆக்கினேய புராணமெனவும் படும். இது பதினெண்புராணங்களுளொன்று. வியாசமுனிவரருளியது. எண்ணாயிரங் கிரந்தங்களையுடையது.

அக்கினிபுவன் } அக்கினிபூத் } குமாரக்கடவுள்.

அக்கினிபோஷணம்—வைசுவ தேவபூஜை.

அக்கினிமணி—சூரியகாந்தக்கல். இது சூரியவொளிபட்ட காலத்துத் தன்மேற்றீயைச்சொரியது.

அக்கினிமித்திரன்—(1) வாயுதேவன் (2) புஷ்பமித்திரன் மகன். சிருங்கிகளிலொருவன்.

அக்கினிமுகன்—(1) தேவன் (2) பிராமணன் (3) சூரபன்மன் பதுமகோமளையிடம் பெற்றமகன். வீரவாகுதேவராற் கொல்லப்பட்டவன்.

அக்கினிவர்ச்சன்—சூதசீஷன் - மகாபௌராணிகள்.

அக்கினிவர்ணன்—இராமன் பரம்பரையில் இருபததாறும் வழித்தோன்றியவன். சுதர்சனனுக்கு மகன். சிற்றின்ப நுகர்தலிலேயே காலத்தைக்கழித்துச் செவ்வையாக அரசு நடத்தாதவன். இவனுக்குப்பின் இவன் மனைவியே அரசுரிமையைத் தாங்கினள்.

அக்கினிவேசன்—(1) இக்ஷ்வாகுவின் இளவலான அரிஷியன் மரபில் வந்த தேவதத்தன் மகன். இவன் ஞானமுற்றபின் ஜாதகர்ண மகருஷியெனப் பெயர்பெற்றவன். (2) அக்கினிதேசியனிற் காண்க.

அக்கினிஷ்டோமம்—ஒருயாகம், வசந்தகாலத்தில் ஐந்து தினங்களில் முடிக்கத்தக்கது. இது சோமயாக

மெனவும் பெயர் பெறும்.

அக்கினிஷ்டோமன்—(1) அக்கினிஷ்டோமஞ் செய்தவன். (2) சட்சுர்மநுவின் புத்திரன்.

அக்கினிஷ்வோத்தர்--பிதிரரில் ஒரு சாரார்பெயர்.

அக்குரன்--இடையெழு வள்ளல்களிலொருவன்.

அக்குரூரன்—சுவபற்கன் மூத்தமகன். விருஷ்ணி வமிசத்தவன். சாத்தகியுமிவனுந் தாயாதிகள்.

அக்குரோதன்—அயுதாயு புத்திரன்.

அங்கஜன்—மன்மதன்.

அங்கஜாரி—சிவன் [மன்மதனை யெரித்தவன்]

அங்கணன்—(1) சிவன் (2) விஷ்ணு (3) பிரமன் (4) அருகன்.

அங்கணி—(1) காளி (2) பார்ப்பதி.

அங்கதபுரி—இலக்ஷ்மணன் புதல்வனை அங்கதனால் உண்டு செய்யப்பட்ட நகரம். இஃது இமயமலைக் கருகிலுள்ளது.

அங்கதன—(1) ஒருவானரவீரன்; இவன் கிஷ்கிந்தைக்கிறைவனை வாலிமகன்; இவன் தாய் தாரை. இவன் இராமன் சேனைத்தலைவருளொருவனாயிருந்து இராவணனிடந் தூதுசென்று அவன் கிரீடங்கள் பத்தினையுந் திருகிக்கொண்டு வந்து இராமன் திருவடியில் வைத்தவன். இவனது குழந்தைப் பருவத்திலே வாலி இராவணனைப்பத்துத் தலைப்பூச்சியென வேடிக்கையாய்இவன்தொட்டிலில்கட்டிவைக்கப்பெற்றவன். (2) இராமன்தம்பி இலக்ஷ்மணன் புத்திரன் (3) ஒரு நிமித்திகனான ஜைநன்.

அங்கதேசம்—சிவபெருமான் மன்மதனை யெரித்து அவனங்கத்தைப் போக்கிய இடத்தைத் தன்னகமாகக் கொண்டமையின் இப்பெயர் பெற்றதேசம். இது கங்காநதியும் சரயுநதியுங்கலக்குமிடத்துள்ளது.

அங்கர்—அங்கநாட்டிலுள்ளோர்.

அங்கர்கோன், அங்கர்கோமான் } அங்கநாட்டிற்கரசனான கர்ணன்.

அங்கன்—(1) உன்முகன் மூத்தமகன். இவன் மனைவி சுநீதி. புத்திரன் வேனன். (2) யயாதியின் நான்காம் புத்திரனான அநு வமிசத்தவன். பலிபுத்திரன்.

அங்காகமம்—ஜைநாகமமூன்றனுளொன்று. அது பன்னிருவகைப்படும்.

அங்காரகன்—(1) உருத்திரர்பதினொருவருளொருவன் (2) நவக்கிரகங்களுளொன்றாகிய செவ்வாய். பூமகனெனவுஞ் சொல்லப்படுவன்.

அங்காரவர்ணன்—ஒரு கந்தர்வன். சோமசிரவதீரத்தில் அருச்சுனனுடன் போர்செய்து அவனது அக்கினி பாணத்தாற்றகிக்கப்பட்டு உருமாறிச் சித்திரரதனென்னு நாமந்தாங்கி அந்தரத்திற் பறந்து சென்றவன். இவன் சொல்லியபடியே பாண்டவர் தௌமியமுனிவரைப் பௌரோகிதராகக் கொண்டனர். இவன் மனைவி கும்பீநசை.

அங்காரவேகன்-சுவலன்புரத்தரசன்.

அங்கிரசன், அங்கிரன்—பிரமாவின் மானச புத்திரருளொருவன். இவனுக்குப்புத்திரர் பிருகற்பதி உதத்தியனென விருவர். புத்திரி யோகசித்தியென்பாள். இவள் பிரபாசனை மணந்து விசுவகர்மனைப் பெற்றவள்.

ஒருகாலத்தில் தேவர்கள் கொடு

வந்த அவிகளை அக்கினிதேவன் அங்கீகரியாது கோபங்கொண்டிருப்ப, அப்பர்கள் அங்கிரசனை அக்கினிக்கு பதிலாக வைத்துத்தமது கருமத்தை முடித்துக்கொண்டதை யுணர்ந்த அக்கினி திரும்பிவரும் பொழுது, அங்கிரசன் அவரைப் பிரதமாக்கினியாக வைத்துச் சாரூபம் பெற்று அவர்க்கு மூத்தபுத்திரனாயினவன.

அங்கிரசன் சிவையை மணந்து புதல்வர்களாக, பிரகசோதி, பிரககீர்த்தி, பிரகமுகன், பிரகமதி, பிரகபாணன், பிரகஸ்பதி, பிரகபிரமா னெனவெழுவரையும், புதல்விகளாக சினீ, வாலீ, குகூ, அர்சிஷ்மதி, மகாமதி என ஐவரையும பெற்றவன். இவர் யாவரும் அக்கினியின் வடிவினர்.

(2) உன்முகன்புத்திரன், அங்கதன்தம்பி, ஸ்மிருதியின கணவன்.

அங்கிரி—மூன்றுகால்களையுடைய ஒரிருடி.

அஙகுசபாசமேந்தி—விநாயகர்

அங்குசபாணி—(1) இந்திரன் (2) ணபதி.

அங்கோத்தரநிசாயம்—ரௌரவ பிடகத்தின் பேருறுப்பினு ளொன்று. இதிற் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினிலக்கணங்கூறப்பட்டுளதென்பர்

அசகன்—சுமந்துபுத்திரன்.

அசங்கன்—அக்குரூரனது தம்பியரு ளொருவன.

அசமஞ்சன்—சகரன்மகன். இவன் தாய் சுகேசி. இவன் தன்னது துர் நடக்கையால் தந்தையால்அந்நகர் கடக்கத் துரத்தப்பட்டவன. இவன் மகன் அம்சுமந்தன்.

அசரீரி—(1) அரூபி (2) ஆகாயவாணி

அசலகீர்த்தி—கனகமாலையின் சகோதருளொருவன் [சூளா.]

அசலன்—(1) புத்திசேனன் பிதா (2) பசுவயிற்றிற் பிறந்த ஒரு பவுத்த முனிவன்.

அசனிவேகம—(1) சீவகன்பட்டத்து யானை (2) கட்டியங்காரன் யானைக்கும் இப்பெயர் வழங்கும்.

அசனை--பலியின்மனைவி. வாணாசுரன் தாய்.

அசி—ஒருநதி. இது காசிநகரத்தில் வரணையென்பதுடன் சங்கமமாதலின் காசிக்கு வாரணாசிவாரணவாசி முதலிய பெயர்கள வழங்கும்.

அசிக்கினி—(1) தக்கன் மனைவியருள் இரண்டாவது மனைவி. அறுபது பெண்களைப் பெற்றவள். (2) ஒரு நதி.

அசிதம்—இருபத்தெட்டுச் சிவாகமங்களுளொன்று. இது சிவபிரான் முழந்தாளும் நான்கு உபபேதங்களும் நியுதங் கிரந்தமுமாகவிளங்குவது.

அசிதை—ஒரப்சரப்பெண்.

அசிபத்திரம்—ஒருமகாநரகம். வட்டமாக ஆயிர யோசனை விஸ்தீரணமுடையது. சூரியகிரணம்அக்கினிகுண்டம் வாள்இவற்றைப்போன்ற கொடுமை வாய்ந்தஇலைகளமைந்த மரங்களையுடையதாய், ஆங்குற்ற மகா பாபிகளை, மிருகங்களாலும் பக்ஷிகளாலுந் துன்புறுத்துகை யில் வருத்துந்தன்மையது.

அசுமகன்—(1) இக்ஷ்வாகு வமிசத்துதித்த கன்மாடபாதன்மகன். இவன் தாய் இவனைப் பிரசவிக்க வருந்தி வேதனைப்பட, வசிட்டர் பிரகுதி

பாஷாணம் என்னுங் கல்லால் அவன் வயிற்றைத் தட்டி இவன்பிறந்தமையின் இப்பெய ரேற்றவன். [அசுமம்=கல்.] இவன்மகன் மாலகனென்றும் நாரீகவச னென்றுஞ் சொல்லப்படுவன.

(2) விதேக தேசத்தரசனான ஜனகனதன்னுறவினரிறந்த துனபத்தால் உலகவாழ்வைநீத்துவனத்துக் கேகுகையில், அவனைத் தடுத்துத் தருமோபதேசஞ் செய்து பிரஜா சமரக்ஷணை செய்யவேண்டுமென வற்புறுத்தி நிறுத்திய அந்தணன.

அசுரகுரு } சுக்கிரன்.
அசுரமந்திரி } சுக்கிராசாரி.

அசுரர்—சுரரல்லாதவர். பதினெண்கணத்தவருளொரு வகுப்பினர். தேவசத்துருக்கள, இவருள தைத்தியரென்றும் தானவரெனறும் இருபகுப்புணடு. அவருள இரணியாக்ஷன் இரணியகசிபன்முதலியோர் தைத்தியரென்றும், தாரகன நமுசி அந்தகன் சயபரன முதலியோரா தானவரென்றுஞ்சொல்லப்படுவ.

அசுரேசன்—காசிபர் பெற்ற அறுபததாறுகோடி அவுணர்க்கிரசன். சுரசையெனப் பெயரிய மாயையின்பிதா. இவனேகாசிபரிடம் சுரசையையனுப்பிச் சூரபனமனாதியரையுதிப்பித்து, அவர்கட்குப் பலவகைப் போதனையுஞ் செய்து "தேவரை வருத்துதி, இந்திரனாதி இமையோரைச் சிறை செய்தி" என்று, இவைபோன்ற கொடுஞ் செயல்களுக் காளாக்கியவன்.

அசுரேந்திரன்—தாரகாசுரன் புத்திரன். வீரவாகுதேவரால் கொல்லப்பட்டவன்.

அசுவசேனன்—தக்ஷகன் மகன். அர்ச்சுனன் செய்த காண்டவ தகனத்திலிறவாது இந்திரனாற்காக்கப்பெற்றவன. கன்னனுக்கு நாகாஸ்திரமாயிருந்து தனகுலத்தை யழித்த அர்ச்சுனனைக் கொல்லக் கருதுற்று அவனேவிய போது கண்ணன் சூழ்ச்சியால கிரீடியின் கிரீடத்தைக் கவர்ந்துசென்று, மீண்டுமொருமுறை விடுகவெனவேண்டி, அவன குந்திக்களித்தவரத்தால் மறுக்க, அவன தேர்க்காலில் வீழ்ந்திறந்தவன.

அசுவதீர்த்தம்—கங்காநதியிற் காலாநதி கூடுமிடத்துள்ள ஒருதீர்த்தம். காதி தன்மகள் சத்தியவதியை மணக்கவந்த இரிசிகனை ஆயிரம் அசுவங்கள் கேட்ப, அவனுக்குக்கொடுக்க அசுவங்களை இரிசிகன் பெற்றவிடமாதலின இப்பெயரேற்றது.

அசுவத்தாமன்—சிரஞ்சீவிய ரெழுவருளொருவன. துரோணாசாரி புத்திரன இவன்தாய் கிருபாசாரியின் தங்கையாகிய கிருபி. பாரத யுத்த ஆரம்பகாலத்தில் சேனாதிபதித்துவம் பெறவொட்டாது கண்ணன் சூழ்ச்சியால் தடுக்கப்பட்டவன் யுத்தத்தில் அசுவத்தாமாவெனும் பெயர்கொண்டயானையொன்றிறப்ப, தருமா வாயால் "அசுவத்தாமாஹதா" எனச்சொல்லக் கோரியகண்ணன் விருப்பின்படி "அசுவத்தாமாஹதா" என்றதோடு "குஞ்சரம்" எனக்கூட்டிச் சொல்லுகையில், குஞ்சரமென்பதுகேட்கவொட்டாது கண்ணன் வெற்றிச் சங்கத்தொனியெழுப்ப, தருமன்சொல்லாதலின் உண்மை யெனத்

துரோணர் மதிமயங்கி மூர்ச்சையடைய, திட்டத்துய்ம்மன் அவரைக் கொன்றனன் அதனாற் கோபங் கொண்டு துரௌபதை பெற்ற பிள்ளைகளை யெல்லாங்கொன்று பழி வாங்கி வியாச சாபத்தால் ரோகியாய், அதனோடு திருப்தி யடையாது, பரிக்ஷித்தையுங் கொல்ல முயன்றவன். பரிக்ஷித்து கண்ணனாற் காக்கப்பெற்றான்.

அசுவபதி—(1) மத்திரதேயத்தரசன். இவன் மனைவி மாளவி. இவன் சந்தான விருப்பாற் சாவித்திரியைக் கருதிப் பதினெட்டு வருடங்கடுந் தவஞ் செய்து சாவித்திரியைப்புத்திரியாகப் பெற்றவன். (2) கைகேயிபிதா. கேகயநாட்டரசன். யுதாசித்துவின்பிதா.

அசுவமேதம்—ஒரு யாகம். அதனைச் செய்விக்க விரும்புவோன் உத்தம லக்ஷணமமைந்த புரவியொன்றனை யலங்கரித்து அதன்நெற்றியில்யாக வரலாறெழுதியஒருபட்டங்கட்டிச் சேனையைக் காவலாக அதனோடு செல்ல விடுத்துத் திக்குகடோறு மனுப்பிப் பகைஞர் அதனைப்பற்றிக் கட்டினால் அவர்களை வென்று குதிரையை மீட்டுக் கொண்டு அவர்களாற் கொடுக்கப்படுந் திறையைப்பெற்றுப்பூப்பிரதக்ஷிணஞ்செய்வித்துத் தன் நகரமடைந்து செய்விப்பது. இங்ஙனமாக நூறுமுறை யியற்றியவன் இந்திர பட்டமடைவானென்பதுபுராணசம்மதம்! இது காரணமாகவேஇந்திரனுக்குச்சதக்கிருது என்றும் பெயர்வழங்கும்.

அசுவாரூட மூர்த்தி—மணி வாசகப் பெருமான் அரிமர்த்தன பாண்டியன் பொருளைச் சிவகயிங்கரியத்திற் செலவிட்டு விட்டமையின், அரசன் தன் விருப்பின்படி பரிகள் வரப் பெறாமையின தண்டலாளரைக் கொண்டு சுவாமிகளை யொறுக்க, மனம்பொறாது நரிகளைப் பரிகளாக்கிக்கொணர்ந்து தாமோர் அசுவமூர்ந்துஒப்புவித்தசிவமூர்த்தி

அசுவினிதேவர்—துவஷ்டாவின் மகளும் சூரியன மனைவியுமாகிய சஞ்ஞிகை யென்பாள் பெண் குதிரை வடிவேற்று நின்றபொழுது அவள் மூக்கினின்றுதித்த இருவர் [இவர் வரலாறு சஞ்ஞிகையிற் காண்க.]

இவ்விருவரும்மிக்க சௌந்தரியவான்கள். ஓரிடத்து வசிக்காமல் உலகமெங்குஞ்சஞ்சரித்து அற்புத வைத்தியம் புரியும் தேவ மருத்துவர். ஒரு காலத்தில் சுகன்னிகை யென்பாளைசகண்டு நீ பேரழகியாயிருந்தும், குரூபியும் தீராநோயினனுமாகிய இச் சியவனனை யேன் மணஞ்செய்து கொண்டனை யெனக்கேட்க, அவள் தங்குற்றந்தமக்குத் தெரியாது பிறர் குற்றத்தைக் கூறுதலில் யாது பயன்? என, இவர்கள் எங்குற்ற மென்னவென, இவன் பிணியைத் தீர்ப்பீரெனில் அதனை வெளியிடுவேனென்று, அவர்கள் அங்ஙனமே தீர்த்தபின்னர் நீங்கள் தேவமருத்துவர்களாயிருந்தும் யாகங்களில் உங்களுக்கு அவிர்ப்பாகங்கொடுப்பதில்லையேன நாணிச் சென்றவர்கள்.

சியவனன் தனக்கு அசுவினிதேவர் செய்நன்றியை மறவாது தன் மாமனாராகிய சையாதியைக்கொண்டு ஒருயாகஞ்செய்வித்து அசுவினி

தேவர்கட்கு அவிவழங்கினன். அது காரணமாக இந்திரன் சினந்து தன் வச்சிரத்தை யெடுக்கத் தொடங்குகையில் அசுவினிதேவரால் அவன் கையிற் சோர்வாத முண்டாக, அவன் மருத்துவரைவேண்டி அது தீரப்பெற்று அவர்க்குயாகாதிகளில் அவிகொடுக்கஇயைந்தனன்.

அசோகவர்த்தனன்—சந்திர குப்தன் பௌத்திரன். மகதநாட்டரசர்களிலொருவன்.

அசோகன்—(1) புத்தன் (2) தசரதன் மந்திரிகளி லொருவன். (3) பௌததசமயத்தை விருத்திசெய்து மகததேசத்தைச் செம்மையாக அரசு செய்த ஒரு மன்னன்.

அசோதரம்—இரவிவன்மனென்னும் அரசன் நகரம்.

அசோதரன்—(1) ஒரு ஜைனமுனிவன் (2) சீவகனுடைய பூர்வஜன்ம நாமதேயம்.

அச்சணந்தி—சீவகனாசிரியன். இவன் முதலில் வெள்ளிமலை யருகிலுள்ள வாரணவாசி நகரத்தரசன். உலோகமாபால னென்னும இயற்பெயருடையான். தவஞ்செய்யக்கருதி மகனுக்கரசளித்து நோன்பு புரிகையில், பூர்வஜன்மபாவத்தால் யானைத்தீ [தீராப்பசி]யெனனும் நோயுண்டாகிமிகவும் வருந்தி ஒராற்றானுந் தீரப்பெறாது சீவகனைக்கண்டு கல்வியறிவுறுத்திச் சிலகாலமிருந்து அவன் பிறப்பினை யுணர்த்தித் தவத்திற்குச் சென்று, ஸ்ரீ வர்த்தமான சுவாமிகளுடைய சரண கமல மடைந்து நோன் பியற்றி முத்தியடைந்தவன்.

அச்சுததீக்ஷிதர்— அச்சுத தீக்ஷிதீயம் எனத் தம்பெயரால்வடமொழியில் ஒரு வேதாந்த சாஸ்திரஞ் செய்த அந்தணர்.

அச்சுதராகுராமகவி—வட மொழியில் இராமாயண சாரசங்கிரகமென்னு நூலியற்றிய புலவர்.

அச்சுதன்—(1) சிவன் (2) திருமால் [அழியாமையுடையோ னென்பது பொருள். சுதம்—அழிவு.]

அச்சுதன் முன்னோன்—பல பத்திர ராமன்.

அச்சுமகன்—அசுமகனுக்கு வழங்கு மொருபெயர்.

அச்சுவகண்டன் } —இரதநிணைபல்
அச்சுவக்கிரீவன் } வந்தரசன். மயூரகண்டன் மகன. பூலோக வித்தியாதர லோகங்கள் முழுதுந்திறை பெற்று அதிபதித்துவஞ் செலுத்தியவன. நவப்பிரதிவாசு தேவர்களிலொருவன்.

அச்சுவபுரம்—ஒருவித்தியாதரநகரம்.

அச்சோதம்—அச்சோதை யென்னு நதிக்கு உற்பத்தி ஸ்தானமான ஒரு வாவி. குபேரனுடைய நந்தன வனமான சயித்திர ரதத்திற் கருகேயுள்ளது.

அச்சோதை—புண்ணியநதிகளிலொன்று. அச்சோவத யென்பவள் முற்பிறப்பில் மரீசிமுனிவர் புத்திரர்களான பிதிர்கணங்கட்கு மானச புத்திரியாய்த் தோன்றியவள். அப்பிதிரர்கள் நிர்மாணஞ்செய்த அச்சோதசம்ராவர தீர்த்தத்தில் ஆயிரந் தேவவருஷமெல்லையுந் தவஞ்செய்து அவர்களை மகிழ்விக்க, அவர்கள் பிரசன்னராக, அப்பிதிரர்களில் மாவசுவென்னுந் தன் தந்தை முறையுடையானை மணயபுரியவே

ண்டு பிதிரர் வெகுண்டு உன் தவமழிக எனச்சபித்தமையின், அவள் பிரஷ்டையாய்ச் சுவர்க்கத்தினின்று கீழ்முகமாக வீழ்ந்து நிலத்திற்சேராது அந்தரத்தில் நின்றவண்ணம் மீண்டும் பிதிரரைக் கருதிக் கடுந்தவம்புரிய அத்தினம் அமாவாசை தினமாதலின (அத்தினத்திற் பிதிரர்களுக்குச் செய்யும் சிறிய உபசாரமும் விசேடமாகக் கொள்ளப்படுதல் இயற்கையாயினமையின) அவர்கள் திருப்தியடைந்து நீ செய்யுங் கருமபலனை நுகர்ந்து இருபத்தெட்டாந் துவாபரயுகத்திலே மீனவயிற்றிற் றோன்றிச் சத்தியவதியெனும் பெயருற்றுப் பராசரரால் வியாசரைப்பெற்று, பிறகு சந்தனுமன்னன் மனைவியாகி, சித்திராங்கதன விசித்திரவீரியனை என்னு மிருபுதல்வரையீன்று இறுதியில் அச்சோதையெனும் புண்ணிய நதியாகுக வென வரமீந்த வண்ணம் நதியுருவாயுளதொன்று.

அஜகரமுனிவன்—அந்தரங்கமான பிரமஞானத்தைப் பிரகலாதனுக்குப்போதித்த ஒரு முனிவன. இவன்சையகிரிச்சாரலி லிருந்தவன்.

அஜகவம்—பினாகத்தின நாமாந்தரம். சிவபெருமானுடையவில்

அஜகன்—புரூரவன் மரபி லுதித்த ஜன்னுவின் பௌத்திரன்.

அஜமீடன்—அஸ்திபுத்திரன். பிருகதிஷன், நீலன, ரிக்ஷன எனும் மூவரைப்பெற்றவன். பாஞ்சால, கௌரவ, பார்க்கதிஷவமிசங்களையுண்டு செய்தவன்.

அஜமுகன—சூரபன்மன் பக்கலிலிருந்த ஓரசுரன், மதுவென்னும் பூதகனைத் தலைவனுற் கொல்லப்பட்டவன்.

அஜமுகி—மாயையென்பாள் காசிபரைக் கூடிப் பெற்றமகள். சூரபன்மன் தங்கை. ஆட்டுவடிவேற்றுக் கூடிப்பெற்றமையின் ஆட்டுமுகத்தை யுடையவள். இந்திராணியைச் சோழியிற்கண்டு தன் தமையன் சூரபன்மனிடம் அவளைச் சேர்க்க விரும்பி, கைப்பற்றிச் செல்கையில் அவளைக் காத்திருந்த வீரமாகாளரால் கையறப்பட்டு தன் துணைவியாயிருந்த துன்முகியுடன் அழுது கொண்டு சூரனிடஞ் சொல்லி முறையிட்டு அவன் கட்டளையாற் பிரமன் மீண்டுங் கையுளதாகச் செய்யப்பெற்றவள். இவள் துருவாச முனிவரைக் கூடிப்பெற்ற புத்திரர் வில்வலன வாதாவி யெனு மிருவர்.

அஜவாகனன்—(1) அக்கினி (2) குமாரககடவுள் [ஆட்டுவாகன முடையோன்.]

அஜன்—(1) பிரமன் (2) சிவன் (3) விஷ்ணு (4) இக்ஷவாகு வமிசத்தவர். இரகு புத்திரன். தசரதன் பிதா. இவன் விதர்ப்பராஜ குமாரியான இந்துமதியின் சுயம் வரத்திற்குச் செல்லுகையில், வழியிடைத் தோன்றிய ஒரு யானைமீது அஸ்திரமொன்றைப் பிரயோகிக்க அதுகந்தர்வனாகித்தனக்குற்ற இருடிசாபத்தைக்கூறி இவனால் தனக்கு நன்மையுற்றதாகக்கருதி, தனக்குக்கைவசமிருந்த அஸ்திர வித்தையின் நுட்பங்களை யிவனுக்குபதேசித்துச் சுயேச்சையாய்ப் போக, இவன் அஸ்திரவித்தையில் வல்லுநனாய்ச்

சுயம்வரத்திற்கு வந்துள்ள மன்னவரையெல்லாம் வென்று இந்துமதியை மணம் புரிந்தவன். காளிதாசகவியாற்சிறப்பித்துப் பாடப்பெற்றவன். (5) திருதன்மகன்.

அஜாதசத்துரு—(1) தருமராசன் (2) மகததேசத்தரசனுன விதிசாரன் புத்திரன். சிசுநாகன் முதலிய அரசர் இவன் வமிசத்தவர்.

அஜாமிளன்—ஒரு பிராமணன். கன்னியாகுப்ஜபுரத்திலிருந்தவன். மகா பாவி. சூத்திரப்பெண்ணை மனைவியாகக் கொண்டவன். மரணகாலத்தில் தன் மகன் நாராயண நாமமுடையோனை விளித்துக்கொண்டேயுயிர்விட, அந்நாமவிசேடத்தால் காலபடர் அவனைப் பற்றாதொழிய மீண்டும் உயிர் பெற்றுப் பரமபக்தனாயினனெனப் பாகவதங்கூறும்.

அஜிகர்த்தன்—சுனஸ்சேபன் தந்தை. வேதகீதங்களிற்சிலவற்றைச்செய்தவன்.

அஜிதன்—(1) சிவன் (2) விஷ்ணு (3) பிரமா (4) ஜைனமதாசாரியரான இருபத்துநான்கு தீர்த்தங்கரரில் இரண்டாவது தோன்றியவர்

அஞ்சகன்—சகுனிபுத்திரன்.

அஞ்சல்நாயகி—திருமயிலாடுதுறையிலே (மாயூரம்) யெழுந்தருளியிருக்கும்உமாதேவியார்திருநாமம்.

அஞ்சனபர்வன்—கடோற்கசன்மகன். அசுவத்தாமனாற் கொல்லப்பட்டவன்.

அஞ்சனம்—வருணதிசையிற் காவல்பூண்டதிக்கஜம் இதன்பிடி தாமிரபருணியெனப்படும்.

அஞ்சனவண்ணன்—திருமால் [கரியமேனியையுடையவன்.]

அஞ்சனவர்மன்—இடும்பியினிடம் வீமனுக்குப் பிறந்த கடோற்கசன் மகன்.

அஞ்சனாக்ஷிதேவி- திருக்கற்குடியிலே யெழுந்தருளியிருக்கும் உமாதேவியார் திருநாமம்.

அஞ்சனாவதி—ஈசானதிக்கிற் காவல் பூண்ட பிடியானை.

அஞ்சனை—(1)ஒரப்சரசு. இவள்சாபவயப்பட்டு, குஞ்சரனென்னும் வானரனுக்கு மகளாயுதித்து விரும்பியவடிவேற்கும் ஆற்றல் பெற்று, ஒருகாலத்தில் மானுடவடிவேற்று சௌந்தரியமுற்ற இளம்பெண்ணாகி வாயுதேவனைப் புணர்ந்து அனுமனைப் பெற்றவள். பின்னர், கேசரனென்னும் வானரனுக்கு மனைவியாக மணஞ்செய்துகொண்டவள். (2) வடதிசையிலுள்ள திக்கயத்தின் பிடி.

அஞ்சுமான்—(1) சகரராஜன் பௌத்திரன். அசமஞ்சன் மகன் (2) மருசியின் றந்தை (3) சூரியன் (4) இருபத்தெட்டுச் சிவாகமங்களுளொன்று. இது சிவபிரானுக்குத் திருமுதகும், பன்னிரு உபபேதமும், ஐந்திலக்ஷங்கிரந்தமுமாக வுள்ளது.

அஞ்சுலன்—இவனுக்கு, சாணக்கியன் கௌடில்லியன், விஷ்ணு குப்தனெனவும் பெயர்கள் வழங்கும். இவன் அர்த்தசாஸ்திரமென்னும் இராஜதருமத்தை யுணர்த்தும் நூல் செய்தவன். மந்திரி. முத்திராராக்ஷஸ நாடகத்திலே வியந்து பேசப்பெற்றவன்.

அஞ்சைக்களத்தப்பர்—திருஅஞ்சைக்களத்தில் சிவபெருமானுக்கு வழங்கும் திருநாமம்.

அடிதானவன்—அந்தகாசுரன் மகன். இவன் தன் கிழவடிவேற்றிருக்கு மெல்லையும் இறவாவரமேற்றவன். ஒருகாலத்தில் உமாதேவியாருரு வெடுத்துச்சிவபெருமானை வஞ்சிக்கத் தொடங்குகையில் அவராற் கொல்லப்பட்டழிந்தவன்.

அடியார்க்குநல்லார்—சிலப்பதிகாரநூலின் உரையாசிரியர். நச்சினார்க்கினியர் காலத்திற்கு முற்பட்டவரெனத் தெரியவருகிறது.

அடைநெடுங்கல்லியார்—புறநானூற்றில் இருபாக்களியற்றிய ஒரு புலவர். கடைச்சங்க காலத்தவர்.

அட்டாங்கஹிருதயம்—இது வாகபட்டரென்பவரால் ஆயுள்வேதமுழுவதும் வடமொழியில் நூற்றிருபது அத்தியாயங்களாகச்செய்யப்பட்ட நூல்.

அணிகொண்ட கோதை—தென்திருமுல்லைவாயிலில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

அணியியல்—அலங்காரநூல்களுளொன்று இது கடைச்சங்க காலத்திலிருந்து பின்னரிறந் தொழிந்தது.

அணிலன்—அட்ட வசுக்களி லொருவன்.

அணுகன்—விப்பிராஜன் புத்திரன். சகுனி புத்திரியான கீர்த்திமதியின் கணவன்.

அணுக்களைந்து—உயிரணு நிலவணு நீரணு தீயணு காற்றணுவென்பன. இஃது ஆசீவக நூல்வழக்கு

அண்டர்மகன்குறுவழுதி—புறநானூறு பாடிய புலவர்களு ளொருவர்.

அண்ணாமலை--பிரமவிஷ்ணுக்கள் கண்டறியாத முடியையும் அடியையும் உடையது, திருவண்ணாமலை, அருணாசலமெனவும் வழங்கும்.

அதங்கோட்டாசான்—அகத்தியர் மாணாக்கர் பன்னிருவரு ளொருவர். தொல்காப்பியனார் செய்த தொல்காப்பியத்தை அரங்கேற்றக் கேட்டவர். இதனை 'சீரதங்கோட்டு முனி கேட்டநூல்'' எனத்தொல்காப்பியத்தைச் சிவப்பிரகாச சுவாமிகள் விதந்து கூறியவிடத்து வருதலுங் காண்க.

அதசிரசு—ஒரு நரகம். இது பரிதானம் வாங்குவோரடைவது.

அதர்மன்—வருணன் ஜேஷ்டாதேவியிடம் பெற்றமகன். நிருதிபுத்திரியாகிய இம்சை கணவன். சுரநிந்தையின் தமயன். பயன் மகாபயன் மிருத்துவெனப்போரைப்பெற்றவன்

அதர்வணாசாரியன்—தெலுங்கு பண்டிதருளொருவன். இவன் பாரதத்தை மொழி பெயர்த்தவன்.

அதர்வவேதம், அதர்வணம் } வேதங்களில் நான்காவது. சத்துருநாசத்திற்குரிய பலமந்திரங்களையும் பிறவேதங்களையொப்ப, கிரியாநுட்டானத்திற்குரிய தோத்திரங்களையும் சூத்திரங்களையு முடையது.

அதலம்—கீழேழுலகங்களு ளொன்று. வெள்ளிமயமானது நாகர்வசிப்பது

அதிகமான், அதிகன், அதிகைமான், அதியமான், அதியன். } இப்பெயர்கள் சேரவமிசத்து ஓரரசனைக்குறிக்கும் ஒரு பொருட்பல் பெயர்கள்.

அதிகமான்--ஔவையின் சகோதரருளொருவன்.

அதிகன்—சேர ராசர்க்களு ளொருவன். இவனே அறுபான் மும்மை நாயன்மாரு ளொருவராய புகழ்ச்

சோழநாயனாருடன் போர்செய்தவனெனப் பெரியபுராணங் கூறும். சித்தூரைச் சார்ந்த போளூருக்கடுத்த திருமலையென்னுஞ் சமணகிராமத்திலுள்ள ஒரு கல்வெட்டால் " இவன் கேரளதேசத்தரசன். இராஜராஜனென மறுபெயருடையான். இவன் வமிசத்தில் எழினி அல்லது யவநிகா என்ற அரசனிருந்தான். இவன் மகன் விடுகாதழகிய பெருமாள் சகடாவென்ற ஊரையாண்டான்" எனத் தெரிய வருகிறது.

அதிகாயன்—இராக்கதன், இராவணன் மகன். பிரமனிடம் அபேத்திய கவசம்பெற்றவன். இலக்ஷ்மணன் விடுத்த பிரமாஸ்திரத்தினாற் கொல்லப்பட்டவன். [அபேத்தியகவசம்= பேதமுறச்செய்யாத கவசம்.]

அதிகாரிப்பிள்ளை—சைவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

அதிசாந்திரன்—சந்திரனுக்குரிய பரியாய நாமம்.

அதிசுந்தரமின்னாள்—அச்சிறுபாக்கத்திலெழுந்தருளிய உமாதேவி திருநாமம்.

அதிசூரன்—(1) சிங்கமுகாசுரன் புத்திரன். உக்கிரனென்னும் பூதகணனாற் கொல்லப்பட்டவன். (2) அறுபான்மும்மை நாயன்மாருளொருவராய ஏனாதிநாதநாயனாரைத் தனது நெற்றியில் வெண்ணீறு விளங்கக் காட்டி வஞ்சித்துக்கொன்ற கொடியோன்.

அதிதி—(1) இக்ஷ்வாகுவமிசத்தவன் இராமன்பௌத்திரன். குசன்மகன் (2) தக்ஷன் தாய் (3) தக்ஷன் மகள் கசியபன் மனைவி; ஆதித்தரைப்பெற்றவள். இந்திராதி தேவர்களையும் பெற்றதாகக் கூறுதலுமுண்டு.

அதிபத்த நாயனார்—அறுபான் மூம்மை நாயன்மாருளொருவர். நாகபட்டினத்திற் பரதவர் குலத்துதித்துச் சிவபத்தியிற் சிறந்து தமது குலத்தொழிலாகிய மீன்பிடித்தலையே தொழிலாகக்கொண்டு, முதலிலகப்படுமீனைச் சிவப்பிரீதியென்று விட்டு வந்தவர். சிலதினங்கள் ஒவ்வொரு மீனேயகப்பட, தம் நியமப்படி சிவப்பிரீதி செய்துகொண்டே பசிப்பிணியால்வருந்தி நின்றபொழுது, சிவபெருமானருளைப் பெற்றவர்.

அதிபலன்—சிவகணவீரர்களிலொருவன். வைரவர் உதிரப்பலியேற்கச் சென்றபொழுது அவருடன் சென்ற நால்வரிலொருவன்.

அதியமான்தகடூர் பொருது வீழ்ந்த எழினி—போரில் வல்ல ஓரரசன். சிறந்த கொடையுஞ் செங்கோலுமுடையவன். இவன் யுத்தத்திலிறந்தபொழுது அரிசில்கிழார் அப்பிரிவாற்றாது யமனைநோக்கிப் பாடப்பெற்றவன். அச்செய்யுள் புறநானூற்றிலுள்ளது

அதியமான் நெடுமானஞ்சி—கடையெழுவள்ளலிலொருவன். ஒரு வகை வீரர்களான மழவர்களுக்குத் தலைவன். யுத்தத்திற் பேர்பெற்ற வீரன். ஒருகாலத்தில் தான்பெற்ற கருநெல்லிக்கனியைப் புசித்தோர் நெடுங்காலஞ் சீவித்திருப்பரென்றறிந்தும், அதனை ஔவைக்குக் கொடுத்துக் கீர்த்திபெற்றவன். காஞ்சிநகரிலிருந்த தொண்டை

மாவெனும், அரசன்பால் ஔவை யைத் தூதனுப்பினோன். சேரமானுறவினன். பனைமாலையன். சேரன்சோழன் திதியன் எருமையூரான் இருங்கோவேண்மான் பாண்டியன் பொருநன் என்னும் ஏழரசர்க்குரிய நாடும் அரசுரிமையும் அவரைப்போரில் வென்று பெற்றவன்.

இவனுடைய ஊர் தகடூர், மலை குதிரைமலை, மகன்பொகுட்டெழினி, இவன் முன்னோராலேயே தேவவழிபாடு செய்து கரும்பு விண்ணுலகினின்று கொண்டு வரப்பட்டதெனப் புறநானூறு கூறும். இவன் சேரமான் பெருஞ் சேரலிரும்பொறையால் வெல்லப்பட்டான். இவனைப் பாடியவர் ஔவையார், பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார் முதலினோர்.

அதியமானெடுமானஞ்சி மகன் பொகுட்டெழினி—இவன் ஈகையும் இன்பச்சிறப்புமவென்றியுமுடையவன். இவனைப்பாடியவர் ஔவையார்.

அதிரதன்—அங்கராஜவமிசத் துதித்த சத்தியகர்மன் மகன். கங்கைக்கரையில் வந்த சிசுவயதாயிருந்த கர்ணனை யெடுத்து வளர்த்தவன். விராதை கணவன்.

அதிராவடிகள்—பதினோராந் திருமுறையில் மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை யியற்றியவர்.

அதிருசியந்தி—(1) அருந்ததி (2)சத்தியென்பான் மனைவி.

அதிவீரராமபாண்டியன்—பாண்டியர் வழிவந்து கருவூரிலரசுபுரிந்த ஒரு சிற்றரசன். இவன் நைடதம் கருவை வெண்பா வந்தாதி, கருவைக் கலித்துறையந்தாதி, கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, நறுந்தொகையென்றும் முதற்குறிப்பாக வெற்றிவேற்கையென்றும் பெயரிய நீதிநூல்முதலியவற்றையியற்றியவன். இவனியற்றிய கருவைப்பதிற்றுப்பத்தந்தாதியே அதன்சொன்னயம் பொருணய முதலியனகருதிக்குட்டித்திருவாசகமென்றும், இவனைச் சைவசிகாமணி யென்றுங் கூறுவர். இம் மூவந்தாதிகளை இவன் தமையன் வரதுங்கராம பாண்டியன் இயற்றினனென்பதுமுண்டு. இவ்விருவரையுஞ்சிறப்பித்து வழங்கும் பழமொழி "பாண்டியரிருவர் ஆண்டியரிருவர்" இவர்கட்கு வித்தியாகுரு நிரம்பவழகிய தேசிகர்.



அதிவீரன்—யாளிமுகன் மகன். மகேந்திரபுரியின் வடபுரத்திலங்கையைக் காவல்கொண்டிருந்து வீரவாகுதேவராற் கொல்லப்பட்டவன்.

அதிஷ்டானபுரம்—சேதிதேசத் திராஜதானி நகரம்.

அதீனன்—சகாதேவன் புத்திரன்.

அதுலகீர்த்தி பாண்டியன்—அதுலவிக்கிரமனுக்குப்பின் அரசு செய்தவன். மதுரையையாண்டநாற்பத்து நான்காம பாண்டியன்.

அதுலவிக்கிரமபாண்டியன்—மதுரையிலரசு செய்த நாற்பத்துமூன்றாம் பாண்டியன்.

அதூர்த்தரஜசு—குசநாபன் மகன்.

அதோக்ஷஜன்—திருமால்.

அத்தியக்ஷரம்—பிரணவம், ஓங்காரம்.

அத்தியாத்மராமாயணம்—விசுவாமித்திரரியற்றிய ஒரு வடமொழி நூல்

அத்தியான்மர்—அண்ட பிண்டங்களில் வியாபகமாயுள்ள பதின்மூன்று

வாயுக்களுக்கு முரியபெயர்.

அத்திரி—சப்தருஷிகளி லொருவர். பிரஜாபதிகளி லொருவர் பிரமாவின் மானதபுத்திரரு ளொருவர். அநசூயைகணவர். சோமன் துருவாசன் தத்தாத்திரேயன் இவர்களைப்பெற்றவர். இராமரைத் தண்டகாரணியத்திற்கண்டு தமதுஆச்சிரமத்திற்குக் கொண்டு போய் உபசரித்தவர். சந்திரன் இவரது கண்ணிற் சனித்தனனென இரகுவமிசமென்னுநூல் கூறும். தம்பெயரால் ஆத்திரேயமென் வேதாங்ககல்பமியற்றியவர்.

அத்திரிகை—ஓரப்சரசு.

அத்திவல்லன்--கங்கவமிசத்திலுதித்த ஒருமன்னவன்.

அத்தினபுரம்<br>அஸ்தினபுரி } குருகுலத்தரசர் நகரம். இது ஹஸ்தியென்பவனு லாக்கப்பட்டமையின் இப்பெயர் பெற்றதென்பர்.

அத்துவிதம்—அத்துவித மென்னுஞ் சொல்லில்நகரம்,அன்மை,இன்மை மறுதலையென்னு மூன்றனுளொன்றுபயக்கும். அவற்றுள், இன்மைப் பொருள் கொண்டார் இரண்டின்மை ஒரு பொருளன்றி இரண்டு முதலியவா யெண்ணப்படும் பொருள்களில்லாமையால்,அத்துவிதம் என்னுஞ்சொற்குப் பொருளொன்றென்பதே யாமெனவும்; ஒருபொருளாயினுங் குணகுணியின் வேற்றுமை தோன்ற நிற்பிற் கேவலமொன்றாத லின்மையால், அத்துவித மென்ப துபசாரச்சொல்லாய் முடியுமாதலால், தன்னின்வேறு யொரு பொருளுமின்றித் தானுங் குணமுடைய பொருளென விசேடிக்கப்படுதலின்றி நிர்விசேடமாய் நிற்கும் பரப்பிரமப் பொருளென்பது அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருளாகக் கோடலின் அவர்கள் கேவலாத்துவிதிக ளென வழங்கப்படுவர்.

இராமாநுசர் சிவாத்துவித சைவர் முதலோரும் அவ்வாறே யின்மைபற்றி யொன்றேயெனப் பொருள் கொண்டு, சத்திசங்கற்ப முதலிய குணங்கள் பரப்பிரமப் பொருளுக்கு உள வென்று உபநிடதங்கள் கூறுதலானும், அவைசெய்கை யென்றற்கோ ரியைபின்மையானும், பசுபாசமுண்மையு முபநிடதங்களி னோதுதலானும், அவைகளோடு முரணிக் கேவலாத்துவிதமெனக்கோடல்பொருந்தாமையின் தன்னோடியை புடைய பசு பாசங்களானுந் தன்குணங்களாய சத்திசங்கற்ப முதலிய வாற்றானும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய்நின்ற பரப்பிரமம் இரண்டில்லை யென்பதே அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருளென விசிட்டாத் துவிதங் கோடலா லவர்கள் விசிட்டாத்துவிதிகளென வழங்கப்படுவர்.

பேதவாதிகள், மறுதலைப் பொருள் பற்றி இரண்டன் மறுதலையாகியஒன்றெனபொருள் கொண்டு, அங்ஙனங்கொள்ளவே அவ்வொன்றன் மறுதலையாகிய இரண்டாவது முண்டென்றற் கிழுக்கின்மையின் அத்துவிதமென்பதுந் துவிதமென்னும் பொருளைப்பயக்கு மென்று பேசுவர்.

கேவலமும், மறுதலையுஞ் சுருதியோடு முரணுதலினானும் விசிட்

டம்" பொருந்துமாயினும், அத்த
விதத்துக்குப்பொருளொன்றெனக்
கோடல் பொருந்தாது; என்னை?
ஒன்றென்பது பொருளாயின், ஒன்
றெனவே விளங்கக் கூறவமையும்;
அவ்வாறின்றி அத்தவித மென
வுய்த்துணர வைத்தோத வேண்
டாமையானும், ஒன்றெனப் பொ
ருள்கொள்ளின், மா வாக்கியப்பொ
ருள் பயப்பதோர் விசேடமின்மை
யின், அத்துவித மென்பதுபற்றி
ஆண்டொரு பயன்படாமையானும்
அது நீ யாகின்றாயெனவும், அது
நானாகின்றேனெனவும், அது வது
வாகின்றதெனவு மூவிடம் பற்றி
நிகழுந் தத்துவமசி முதலிய மா
வாக்கியங்களைக் கேட்டவழி, அது
வென்பதொருபொருள், நீ யென்ப
தொரு பொருளாகலின், ஒருபொ
ருண் மற்றொரு பொருளா மாறு
யாங்ஙன மென்னு மையநீக்குதற்
கெழுந்ததாகலின் அது வதுவாதற்
கேதுவான அவ்விரண்டு மொன்றா
கிய சம்பந்த விசேட முணர்த்து
தலே அத்துவிதமென்னுஞ் சொற்
குப்பொருளெனச் சித்தாந்த சைவ
ருரைப்பர்.

அத்துவைதானந்தன் — சதானந்தரு
டைய ஆசிரியர். இவர் வேதாந்த
நூலுக்கு வடமொழி வியாக்கியா
னஞ் செய்தவர்.

அநகன்—(1) அருகன் (2) சிவன் (3)
கடவுள்.

அநங்கமாலை—ஓர்நாடகப்பரத்தை.

அநங்கன் — மன்மதன் [உருவிலான்.]

அநசூயை—(1) அத்திரி முனிவர் ம
னைவி. இராமன், தன்கணவராகிய
அத்திரி முனிவரால் நயந்து ஆச்சிர
மத்திற்குக் கொண்டு வரப்பட்ட
பொழுது, சீதைக்குப் பெண்கட்கு
ரிய ஒழுக்கங்களைக்கற்பித்து, தீர்க்க
சுமங்கலியாயிருக்கவென் றாசீர்
வதித்து அநேக ஆடையாபரணங்
களைக் கொடுத்தவள் (2) சகுந்தலை
யின்றோழி.

அநந்தகுணபாண்டியன்—மதுரையை
யரசு புரிந்த பத்தாவது பாண்டி
யன். நாகமெய்த திருவிளையாடல்
மாயப்பசுவைவதைத்த திருவிளையா
டல் என்னுமிரண்டும் இவன்காலத்
திலே நிகழ்ந்தன.

அநந்தசயனன—விஷ்ணு.

அநந்தசோமயாஜியார்—வைணவசிங்
காசனாதிபதிகள் எழுபத்து நால்
வருளொருவர்

அநந்தஞானி—கடவுள்.

அநந்தாழ்வான்—(1) வைணவசிங்காச
னாதிபதிகள் எழுபத்து நால்வரு
ளொருவர். (2) ஆதிசேடன்.

அநந்தநேமி—உச்சயினிராசன். புத்
தர்காலத்திருந்தவன். பிரத்தியோ
தானன்பிதா.

அநந்தலோசனன்—(1) கடவுள். (2)
இந்திரன் [எண்ணிறந்த விழிகளை
யுடையான் ]

அநந்தவிஜயம்—தர்மபுத்திரன் சங்
கம்.

அநந்தவிரதம்—புரட்டாசிமாச சுக்ல
பக்ஷ சதுர்த்தசியில் அனுட்டிக்கப்
படுவதோர் விரதம். இது பாண்ட
வர்க்குக் கண்ணனாற் சொல்லப்பட்
டது. இது மகைசுவரிய மளிக்க
வல்லது.

அநந்தர்—ஞானசத்தியைக் கொண்டு
சுத்திருசா[illegible]த்தில் அனந்த
பஞ்சகிருத்தியத்து [illegible]ற

நடத்துபவர்.

அநந்தன்—(1) சிவன் (2) விஷ்ணு (3) கிருஷ்ணன் (4) பலதேவன் (5) சேஷன் (6) காசிபன் மனைவிமார் பதின்மூவரிற் கத்துருவினிடம் தோன்றிப் பூமியைத் தாங்கும் நவநாகங்களுள் ஒன்று. (7) புத்தருடைய பிரதம சிஷருளொருவர். இவர் கௌசாம்பியி லிருந்த உதயனனெனுமரசன் மனைவியர், ஐந்நூற்றுவருக்கும்பௌத்த மதோபதேசஞ் செய்தவர். (8) ஜைனமதஸ்தாபனஞ்செய்த இருபத்து நான்கு தீர்த்தங்கரரில் பதினான்காவது தோன்றியவர்.

அநந்தை—(1) உமாதேவி (2) பூமி.

அநங்கியஜன்—காமதேவன்.

அநபாயன்—சோழராசாக்களி லொருவன், இவனிடத்திலே சேக்கிழார் சுவாமிகள் மந்திரியாராக விருந்து இவனை ஜைனமதப் பிரவேசத்தினின்று திருப்பும் பொருட்டே திருத்தொண்டர் புராணத்தையியற்றினர். இவன் செவ்விய செங்கோலினைக்கிரமமாகச் செலுத்தியவனென்பது 'அன்னையோ ரெவ்வுயிருந் தாங்கு மநபாயா, நின்னையா ரொப்பர் நிலவேந்தரன்னதே,வாரி புடைசூழ்ந்த வையகத்திற் கில்லையால், சூரியனை போலுஞ் சுடர்'' என்னும் பழையவெண்பாவானுணரப்படும்.

அநமித்திரன்—யது வமிசத்தவன் உதாசித்துமகன். நிக்னன் சினி பிருசினி இவர்கள் தந்தை.

அநரணியன்—(1) அசோகன் (2) இர[illegible] புத்திரனுடைய அரசன். இவனை இராவணன் கொல்லுகையில், என் வமிசத்தி லவதரிக்கும் இராமனாற் சாவாயாகவென்று சாபமிட்டுயிர் விட்டவன். அரியசுவன் பிதா. அநரணியனென்னு மிருவரும் இக்ஷ்வாகுவமிசத்தவரே.

அநர்க்கராகவீயம்—வடமொழி நாடகங்களிலொன்று. முராரியென்னுங்கவியாற் செய்யப்பட்டது.

அநலப்பிரியா—சுவாகாதேவி. [அக்கினிமனைவி]

அநலர்—தேவயோனிகள். இத்தொகையினர் நாற்பத்தொன்பதின்மர். இவர் தலைவன் அபிமானன். அவனுக்குப்பாவகன் பவமானன் சுசியெனப்புத்திரர் மூவர். இவர்கள் புத்திரர் நாற்பத்தைந்து பேர்கள். அக்கினிதேவனிற்காண்க.

அநலன்—(1) அக்கினிதேவன் (2) அட்டவசுக்களிலொருவன் (3) குசவமிசத்து நிஷதன் மகன் (4) மாலிமகன். விபீஷணனது தோழன்.

அநலை—மாலியவான் மகள். இவள் தாய் சுந்தரி.

அநாகுலன்—ஒரு பாண்டியன், இவன் தேரேறிக் ககன மார்க்கத்துலாவுகையில் திலோத்தமை யெனும் அப்சரசைக்கூடிப் பெற்ற மகன் சாரகுமாரன், இடைச்சங்ககாலத்திலிருந்தவனே.

அநாசிருதர்—பராசத்தியைக் கொண்டு சிவசாதாக்கியத்தில் அசுத்த பஞ்சகிருத்தியத்தொன்றை நடத்துபவர்.

அநாதர்—கிரியாசத்தியைக் கொண்டு கன்மசாதாக்கியத்தில் அசுத்தபஞ்சகிருத்தியத்தொன்றை நடத்துபவர்.

அநாதிநாதர்—நவசித்தருளொருவர்.

அநாயு—கசியபன் மனைவி, தக்ஷன் மகள் அநுகையென்றுஞ் சொல்லப்படுவள்.

அநாவிலன்—சுக்கிரன்.

அநான்மவாதிகள்—ஆன்மாவென்றொருபொருளில்லை யென்போர். இவர் நாஸ்திகர்.

அநிருத்தன்—(1) திருமால் பிரமனைத் தோற்றுவிக்கக் கருபாரம்பத்தி லெடுத்த திருவுருவம். (2) கிருஷ்ணன் பௌத்திரன், பிரத்தியும்னன் மகன், உருக்குமிணி புத்திரியிடம் பிறந்தவன், வாணாசுரன் மகள் உஷையாற்கவரப்பட்டு, அவளது தோழியாகிய சித்திரலேகையுதவியால் ஆண்டுள்ள காவலைக்கடந்து உஷையின் பள்ளியறை சேர்ந்து அவளைக்கூடியவன். இவற்றையறிந்தவாணாசுரன் அவனைக்கொல்லப் போர்புரிந்து சாத்தியப் படாமையின் மாயாசலத்தால் மயக்க, கிருஷ்ணன் வாணாசுரனைப் போரில் வென்று காக்கப்பட்டு உஷையை மணஞ்செய்து கொண்டவன்.

அநிலன்—(1) அட்டவசுக்களிலொருவன் (2) தசவாயுக்களுளொன்று (3) ஓரிராக்கதன். மாலிமகன் அநலன் தம்பி, விபீஷணன் தோழன்.

அநீகன்—பதுமரபினன், வசுதேவனுக்கிளவல்.

அநு—(1) யதுவம்சபிலுதித்த குருவசன் மகன் (2) சுயோதலோமன் புத்திரன்.

அநுகீதை—பாரதத்தில் அசுவமேதபர்வத்திற் சொல்லப்பட்டுள்ள ஒரு வேதாந்த கிரந்தம்

அநுகை—அநாயு, கசியபன் மனைவி, தக்ஷன் மகள்.

அநுதாபன்—தநுபுத்திரன்.

அநுபதேவன்—(1) யதுவம்சபிலுதித்த தேவகன் புத்திரன். (2) அக்குரூரனுடைய இரண்டாம் புத்திரன்.

அநுபமை-நிருதிதிசையிலுள்ளபெண் யானை.

அநுமதி—(1) பிரமன் மனைவியருளொருத்தி (2) பூரணைநாள்.

அநுமதீயம்—அநுமனாற் செய்யப்பெற்ற ஒரு பரதநூல், இது பாவராக தாளலக்ஷணங்களை நன்குவிளக்குவது.

அநுமன்—அஞ்சனை வயிற்றில் வாயுவினனுக்கிரகத்தாற் பிறந்த வானரவீரன். இளமைப்பருவததே சூரியனை நோக்கிப்பாய்ந்தவன். கல்வி வல்லமை பராக்கிரம முதலியன மிக்குடையவன். தேவாமிசமென்றுஞ் சொல்வதுண்டு. கிஷ்கிந்தைக்கிறைவனுனவாலியின் கொடுஞ்செயலைக்கண்டு மனஞ்சகியாது இராமனைக்கண்டு சுக்கிரீவனுடன்நட்புசெய்வித்து, வாலியைக் கொன்று இலங்கைக்குத் தூதுசென்று சீதையைக் கண்டுவந்து, பலவானரசைநியங்களைத் துணைப்படுத்திச் சேதுபந்தனஞ்செய்து இராவணவதமுடித்துச் சீதையைக்கொண்டு வந்து அயோத்திசேருமெல்லையும்பெருந்துணையாக நின்றவன். இராமபத்தரிற் சிறந்தவன்.

அநுவழி—புதன்.

அநுஹலாதன்—தைத்தியனான இரணியகசிபன் மகன்

அநுவிராதன்—ஓரரசன். குரோதபுத்தியில் நஷ்டமானவன்.

அநூரு—(1) கசியபருக்கு அக்கர்மனைவியர் பதின்மூவரில் விந்தையிடக்

தோன்றிய புதல்வன். இவனும் இவன் தம்பி கருடனும் அண்டஜர்கள்; இவன் தாய் விநதை தன் சகளத்தி கத்துருவைக்குப்புத்திரன் முன்னமே பிறந்து விட்டமைக்கு மனஞ்சகியாது அண்டம் பக்குவப்படா முன்னரே அதனைச்சிதைப்ப, தொடைமுதலியகீழுறுப்புகளின்றிப் பிறந்து, தன் அங்கவீனத்திற்குக் காரணம் தன்றாயென்றறிந்து அவளைச் சினந்து 'நீ கத்துருவைக்கு அடிமைப்படுக.' எனச்சபித்துச் சூரியனை யடைந்து அவனுக்குத் தேர்ப்பாகனாயினவன். இவனுக்கு அருணனென்றும் பெயர். இவன் மனைவி சியேனி, புத்திரர்-சம்பாதி சடாயுவென்போர் (2) புதன [அனூரு=தொடையில்லாதவன். ஊரு-தொடை.]

அநேநசன—(1) இக்ஷ்வாகு வமிசத்தவன். ககுத்தன் மகன். இவனுக்கு அநரணியன் சுயோதனனென்றும பெயர்களுண்டு. (2) ஆயுபுத்திரன். நகுஷன் தமையன். சுதத்தன் பிதா.

அகோரதர்சி—புத்தர்களில் பத்தாவதாகத தோற்றியவன்.

அந்தகன்—(1) யமன (2) இரணியாக்ஷன் மகன. அரியவரங்களைப்பெற்ற அகந்தையால் அமரர்களைத் துன்பு செய்துவர, அவர்கள அவனை வெல்ல முடியாதுயாசிக்க 'நீங்கள் நாரீவடிவேற்று மணிபணி சேலை முதலியன வணிந்து திரிவீராயின் அன்புசெய்வேன்' எனக்கூற, அந்நகையுடன்பாடு பெற்றதே சாலுமென்றிருந்தார். [illegible] யுடைந்து [illegible] செய்து இவனைத் தரிசித்து விண்ணப்பித்து அருள் பெற்றிருந்தனர். அவர்கள் இருஞ்சூழுமியிருந்தமையின் அந்நிலையில் அவர்களோடு போர்செய்ய [illegible]யில், தேவர்கள் சிவபெருமானைப் பிரார்த்திப்ப, சிவபிரான் அவனைச் சூலமுனையிற்குத்தி அநேக காலங் கழித்து அவனை விடுத்துச் சிவகணனாக்கினார். இவனைத் திருக்கோவலூர் வீரட்டத்திற் சிவபெருமான் கொன்றன ரெனவும் புராணங் கூறும். (3) சனி.

அந்தகசயன் } அந்தகனைச் சங்கரித்த
அந்தகாரி } வா, சிவ பெருமான். இமமூர்த்தம அஷ்ட வைரவ மூர்த்தங்களுளொன்று. [நதி.

அந்தசிலம— விந்தகிரியிலுள்ள ஒரு

அந்தரசாரிகள—சாரணர். பௌத்தரிற் சித்திபெற்றோர் [மணிமே]

அந்தரம்—(1) ஆகாயம் (2) தெலுங்க தேசம். இது ஆந்தரதேசமெனவும் வழங்கும்.

அந்தீரர்—தேவசாதியரானபதினெண் கணங்களு ளொருசாரார்,

அந்தரிக்ஷன—ஒருதானவன். முமாசுரன்புத்திரன் கிருஷ்ணனாற்கொல்லப்பட்டவன்.

அந்தர்த்தானன்—பிருதுசக்கரவர்த்தி மகன. விசயாசுவனென்னும பெயருமுடையவன். இவன் முதன் மனைவியாகிய சிகண்டியென்பவள் வசிட்ட சாபத்தினாற் பூமியிற்றோன்றி, பாவகன் பவமானன சுசியெனப்பெயரிய மூன்று அக்கினிகளைப்பெற்றாள். இவனிரண்டாம் மனைவியான நபஸ்வதி யென்பாள் அவிர்த்தானனைப் பெற்றான்.

அந்தணி—(1) [illegible]

திரன் மகன் (2) தானவனுன விப்பிரசித்தி மகன்.

அக்கிசாரன்—(1) மதிசாரன் (2) அந்தகன் (3) யதுவமிசததச் சாத்துவகன் புத்திரருளொருவன், இவன்புத்திரர் பசமானன், குக்குரன், சுமிகம்பளபரிகிஷனென்னு நால்வர் (4) தனுபுத்திரன்.

அக்கிபதி—காந்தார நாட்டுள்ள பூர்வதேசத்தரசன், நீலபதி கணவன, இராகுலன்பிதா, அவனிராஜதானி இடவயமெனப்படும். தன் மைத்துனனுந் துறவுபூண்டோனு மாகிய பிரமதருமன் கட்டளையால் அந்நகரை நீங்கி யதன் வடக்கிலுள்ள அவந்தி நகரை யிராஜதானியாகக் கொண்டவன்.

அக்கிமான — கொடையாற் சிறந்த இடைஎழு வள்ளல்களு ளொரு

அந்தி வண்ணன்—சிவன. [வண.

அந்துவஞ்சாத்தன்—ஒல்லையூர்தந்தபூதப்பாண்டியன்சேயருளொருவன்.

அந்துவஞ்செள்ளை—மையூர்க் கிழான் மனைவி. செள்ளையெனபது பெண்பாலார்க்குப்பூர்வத்திவ்வழகைவந்தோர் மரியாதைச்சொல்.

அஞ்ஞிகன்—காசியிலிருந்த ஓரந்தணன்: சாலியென்பாள் கணவன் [மணிமேகலை]

அபசாளம்—வைத்திர பீடகத்தின் சிற்றுறுப்பினுளொன்று.

அபயகுல சேகரன்—ஒரு சோழன். இவன் இராஜராஜ அபயகுலசேகர சோழ ராஜனெனவும் பெயர்பெற்றவன். திருநாரையூரிற் பொல்லாப்பிள்ளையார் திருவருளை நம்பியாண்டார் நம்பி என்பாரடைந்துளாரென்ப துணர்ந்து, பழங்கள் பலகாரங்கள்முதலியவற்றை அவர் மூலமாக விநாயருக்குத்திருவமுது செய்வித்து, அவரால் மூவர் முதலிகளருளிய தேவாரத் திருமுறைகளேழும் சிதம்பரத்திற் சேமிக்கப் பட்டுள்ளனவென்றுணர்ந்து, அங்ஙனமே சிதம்பரத்தில்வந்து மூவரையும் உற்சவகோலங்கொண்டெழுந் தருளுவித்து அவர்கள் கையிலச் சினையிட்ட அறையைத் திறந்து, தேவாரமெழுதிய ஏடுகள்பல வன்மீக மூடப்பட் டிருக்கக்கண்டு மனமாழ்கி "வேண்டுவனவே வைத்தோம்" என்னும் அசரீரிகேட்டுக் களித்து, அவற்றையெடுத்துப் பலர்க்கும் பகிரங்கப்படுத்தி உலகத்தில் ஓதுவித்தவன். மிக்க புண்ணியன்.

அபயன்—(1) தருமன் புத்திரருளொருவன் (2) கலிங்க நாட்டிற்குப் படையெடுத்துச்சென்று போர்புரிந்து அந்நாட்டைக் கைப்பற்றிய ஒரு சோழன்.

அபர்ணை — உமாதேவி சிவபிரானை நோக்கித் தவஞ்செய்கையில் இலையிற்புசியாத நியதியாற்பெற்ற திருநாமம். இலையிற்புசியாதவளெனப் பொருள் [பர்ணம்-இலை]

அபானன்—தசவாயுக்களி லொன்று இதுஉச்சர்க்கத்தலத்திடைநிற்பது.

அபிசாரர் — காஸ்மீரத் தருகிலுள்ள நாட்டில் வசிக்கும் இருஷியர்கள்.

அபிஜித்—(1) யதுமரபிலுதித்த தயிததியோதனன். (2) சந்திர புஷ்ய நக்ஷத்திரம்.

அபிடேகபாண்டியன் —மதுவரையை யாசபுரிந்த ஆறுவது பாண்டியன். இவன்காலத்திலேமாணிக்கம்விற்ற திருவிளையாடல், வருணன்விட்ட

கடலை வற்றச்செய்த திருவிளையாடல், நான்மாடக்கூடலான திருவிளையாடல், எல்லாம்வல்லசித்தரான திருவிளையாடல், கல்யானைக்குக் கரும்பருத்திய திருவிளையாடல், என்னும் இத்திருவிளையாடல்கள் நிகழ்ந்தன.

அபிதர்மபிடகம் — பௌத்தாகமங்களில் மூன்றாவது. இது தருமசங்கணி, விபங்கம், கதாவஸ்துப்பிரகரணம், புத்கலப்பிரஜ்ஞப்தி, தாதுகதை, யமகம், பிரஸ்தானப்பிரகரணமெனஎழுவகையினையுடையது

அபிதானசிந்தாமணி—ஜைன சித்தாந்த நிகண்டு. இது ஏமசந்திரனாற் செய்யப்பட்டது.

அபிதானரத்நமாலை — ஸம்ஸ்கிருத வைத்திய நூல்களிலொன்று.

அபிநந்தனன்—ஒருசாரணன் இந்திர பட்டம்பெற யாகஞ்செய்தலை அறிந்த இந்திரன் தன்பட்டத்திற்குக் கேடு வருமென்று காலரூபியென்னும் அசுரனால் அவ்யாகத்தையழிப்பிக்க யாகமிழந்தவன் [பௌத்த கொள்கை]

அபிநந்தனர்—சுயம்வர ராஜனுக்கும் அவன் மனைவி சித்தார்த்திதேவிக்கும் பிறந்தவர். நான்காவதாக வந்த சைனதீர்த்தங்கரர். இவர் சாகேத நகரத்தார்.

அபிநவகுப்தன்— வாதஞ்செய்து சங்கராசாரியரிடம் தோல்வியுற்ற வடநாட்டுப்புலவன்.

அபிமன்யு } (1) அர்ச்சுனன்மனைவி
அபிமன்னு } சுபத்திரையிடம் பிறந்தவன். இவன் சந்திராம்சமெனப் படுவன், விராடன் மகள் உத்தரையை மணந்தவன். பதின்மூன்றா நாட்போரில் பதுமவியூகத்தையுடைத்துப் பெரும்போர் செய்து இறந்தவன் (2) காஸ்மீர தேசத்தரசருளொருவன்.

அபிராமி—(1) பார்வதி (2) சத்தமாதருளொருத்தி. இவளுக்கு வாகனம் அன்னம். ஆயுதம் மறை. (3) மதுரையிலரசுசெய்த வீரபாண்டியன் காமக்கிழத்தியருளொருத்தி, இவள் மகன சுந்தரத்தோள்மாவலிவாணதிராயன். இவனுஞ் சிறிதுகாலம் பட்டம்பெற்றவன்.

அபிராமிபட்டர்— வடமொழி தென்மொழிகளில் வல்லுநராய்த் தேவிபூசையைச்சிரத்தையுடன் செய்துவந்த ஒரந்தணர். இவர் தஞ்சைமன்னனிடஞ் சென்று தமது கல்விசாமர்த்தியத்தை புணர்த்தி வசித்துவருகையில், அரசன் ஒருநாள் அவரைநோக்கி இன்றென்னதிதியென அன்று அமாவாசை யென்றுப் பூரணையென, அரசன் சிலேடைப்பொருள்பட இது மதிகெட்டதினமென, பட்டர் தமது சொல்லைத்தாபிக்கப் பூரணையே யாம், சூரியாஸ்தமனமாஞ் சமயங்காட்டுவேல் என்று தீபகாலத்தில் அரசனையடைய, இதனையறிந்த நகரவாசிகள் யாவரும் அரசன் மாளிகையிருந்து காத்திருப்ப, பட்டர் உலகமாதாவாகிய அபிராமி தன்னைக் காப்பது உறுதியென்று திடமாயிருந்து அரசனைநோக்கி மண்டலேசுவரா! யான் கூறுவனயாவும் தேவிவாக்கே. என் வாக்காகிற் பொய்க்கலாம் தேவிவாக்கு ஒருபோதும் பொய்க்காது என்றுகூறி, அபிராமியின்

தேர்த்திரரூபமாகிய அந்தாதியொ ன்று செய்து துதிப்பத்தொடங்கி, பத்துச்செய்யுட்கள் சொல்லுவதற் குள் சோடசகலைகளோடு கூடிய பௌர்ணிமாசந்திரன் றோன்றிவெவ ரும் அதிசயித்துப் பார்த்து மகிழும படிகீழ்த்திசையினின்று மேலெழு ம்ப,பட்டர் தமது பாட்டை நிறுத்தி விடாது நூறுகவிகளுஞ் சொல்லி அந்தாதியை முடித்தனர். அரசன் அவரிடத்தில் மிக்க அன்பும் அச்ச முமுடையனாய் மானியமுதலியன வளித்துத தாமிரசாசனமுங்கொடு த்தனன். இவர் சந்ததியார் திருவி டைக்கழியில் இன்றளவும்வசிதது ளர். [உமாதேவி காற்சிலம்பே பூர் ணசந்திரனாகப் பிரகாசித்துப் பட் டர் விருப்பத்தின்படி பலர்க்குமகாட்சி தந்து மறைந்தருளியதென ப்பெரியோர் சொல்லுவர் ]

அபிராமியம்மை } அபிராமவல்லி } திருக்கடவூரில் உமாதேவி யாருக்கு வழங்குந திருநாமம்.

அப்சரசு—தேவதாசிசட்கு வழங்கும் பெயர். அரம்பை மேநகை ஊர் வசி கிருதாசி திலோத்தமை முத லியவர்கள இவ்வகுப்புக் கன்னியர் கள். இவர்கள் திருப்பாற்கடல் க டைந்த காலததில் அதினின்றும் தோனறியவர்க ளென்றும், கசிய ப்ர்பாலுதித்தவர்களெனறும் மாறு பட நூல்கள் கூறும்.

அப்சன் } அப்ஜன் } (1) சந்திரன் (2) தன் வந்திரி [நீரிற்சனிததவன்.]

அப்பர் சுவாமிகள்—திருநாவுக் கரசு சுவாமிகள்.

அப்பிரகற்பம்— சிவபெருமான் அப் பிரக விஷயமாகக்கூறிய மூருவட மொழிவைத்திய நூல். [அப்பிர கம் - ஒருவகை லோகக்கல்]

அப்பிரதிரன்—பூருவமிசத்து மதிசார னது மூன்றாம புத்திரன்.

அப்பிரதிஷ்டம—கொடிய பாவிகளை யெண்ணிறந்த யந்திரங்களிலிட்டு அரைக்கப் படுவதாகிய ஒரு மகா நரகம்.

அப்பிரமை— இந்திர திசையிலுள்ள திக்கயமும் ஐராவதமென்னும்பெய ருடையதும இந்திரன் வாகனமு மாகிய நாற்கோட்டு வெள்ளானை யின் பிடி.

அப்பிரேரக சாதனம் — தன்னைவே வுவோனில்லாத கருவி. அது பக்ஷி க்குச் சிறகுங்காலும் போல்வது. இது ஜைனநூற்கொள்கை.

அப்பூதியடிகளுயனூர்—அறுபான்மும் மைநாயன்மார்களுள் திங்களூரிலே தோன்றிய பிராமணர். இவர் திரு நாவுக்கரசு சுவாமிகள் பிரபாவத் தைக கேள்வியுற்று அவரிடத் த மைத்த பக்தியால் திருநாவுக்கரசு சுவாமிகள்பேரால் திருமடம் தண் ணீர்ப்பந்தர் முதலியன வமைத்து மனைவி மக்கள் முதலிய யாவரை யும் சுவாமிகள் பேராலேயே ய ழைத்து வந்து ஒருகாலத்தில் திரு நாவுக்கரசு சுவாமிகள் தமதூரை யடைய, அவரை யழைத்துபசரித் துச் சென்று தமது மாளிகையில் திருவமுது செய்யும்படி வேண் டியிருத்தி, அவருண்ணற்குப் பெ ரிய வாழையிலை கொய்து வரும் படி மகனை யேவ, அத்திருவன் சு வாமிகளிடத்துற்ற அன்பினால் இலை கொய்கையில் சர்ப்பந்தீண்டியதை

யும் பொருட்படுத்தாது இலையைக் கொணர்ந்து தாயின்பா லளித்து உயிர்விட, அப்பூதியடிகள் அம்மகனை ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டு, சுவாமிகளுக்கு அமுதிடுவதானார். சுவாமிகள் அதனையுணர்ந்து தேவாரமோதி அம்மகவை யெழுப்பி அப்பூதியாரையும் மகனையும் உடன்வைத்து அமுதுசெய்து பிறதலங்கட்குஎழுந்தருளினர். இவர் திருநாவுக்கரசு சுவாமிகளிடத்திலே அன்புசெலுத்தி முத்தி பெற்றவருளொருவர்.

அப்பயதீக்ஷிதர்—காஞ்சி நகரத்திற்கருகிலுள்ள அடையபலமெனும் அக்கிரகாரத்திலுதித்த பிராமணர். வடமொழி வல்லுநராய் இருநூற்றைம்பது நூல்கட்கு மேற்பட இயற்றியவர். சிவபரத்துவ நிரூபணஞ்செய்தவர்களில் இவர் தலைமையாகவெண்ணத்தக்கவர். தர்க்கம் வியாகரணம் வேதம் புராண முதலியவற்றில் ஒப்பாரு மிக்காரு மில்லாதவர். சுமார் மூந்நூறு வருடங்கட்கு முன்னிருந்தவரெனச் சிலர் கூறுவர்.

அமரசிங்கன்—விக்கிரமார்க்கன் அவைக்களத்திலிருந்த நவரத்தினமெனும் பட்டம் பெற்ற ஒன்பது பண்டிதருளொருவன். இவன் காவ்யகல்பலதா, அமரசிங்கமெனும் நாமலிங்கானுசாசனம், தேவகோச நிகண்டு முதலியன வடமொழியிற் செய்தவன்.

அமரசுந்தரி—பூமிசந்திரனென்னு மரசன் மனைவி. புண்ணியநாசனை வளர்த்த தாய்.

அமரர்—இறந்தவர் [மரணமற்றவர்].

அமராவதி—தேவேந்திரனது இராஜதானி நகரம்.

அமரிஷன்—சுசாந்திமகன்.

அமர்நீதிநாயனார்—அறுபத்துமூவருள் நாயன்மார்களுளொருவர். பழையாறையென்னு மூரில் வணிககுலத்திலுற்பவித்தவர். சிவனடியவர்க்குக் கீளுங்கோவணமுந் தானஞ்செய்து வருபவர். ஒருநாள் சிவபெருமான இவரைச் சோதிக்கும்படி ஒருசந்நியாசவேடங்கொண்டு ஒரு கௌபீனத்தைக்கொடுத்து யான் மீட்டும் வந்துகேட்கையில் இதனைத் தருகவெனச் சென்று, சின்னாட்சென்றபின்னை, வந்து அதனைக்கேட்ப, நாயனார் தாம் அதை வைத்த விடத்தும் பிறவிடங்களிலுஞ் சோதித்துப் பார்த்துக் காணாமையால் பெரிதும் இடருழந்து, பெரியீரே! அது என்னையோ, கைசோர்ந்தது. வேறுகீளுங் கோவணமுஞ்சிறந்தனவாகத் தருவலென, பெரியர் வேறொன்றினை யான் அணியேன். என்பாலுள்ள அதன் சமனான இக்கோவணத்தை ஒருதுலையிலிட்டு அதனெடையான துணிமணிகளைத் தரின் பெற்றுச் செல்வேனென, நாயனார் அதற்கிணங்கி, அவர்பாலிருந்த கோவணத்தைத் துலையிலிட்டு மறுதட்டில் தம்பாலுள்ள துணிகளையும் பொற்பணிகளையும் வெள்ளிசெம்பு முதலியவற்றாற் செய்த பாத்திரங்களையும் பிறபொருள்களையும் புதல்வரையும் மனைவியையும் ஏற்றுந்தோறுஞ் சிறிது சிறிதாகச்சமவெடைக்குப் பின்னும் குறைய, நாயனாரே அதில் ஏறத்தட்டிரண்டுஞ் சரி

யாயினர். அச்சமயத்தில் இறைவர் அவரன்புக்ககமகிழ்ந்துகாட்சிதந்து முத்தியளிக்கப்பெற்றவர்

அமவசு—புரூரவன்மகன். இவனுக்கு விஜயனென்றும் நாமாந்தரம்.

அமாவாசியை—சூரியசந்திரர்கள் ஒன்று கூடுந்தினம். முப்பது தினங்கட் கொருமுறைவருவது. இது பிதிர்தினம். இத்தினத்தில் பிதிரரை நோக்கி ஒரு சிறிது தானந் தர்ப்பண முதலியன செயினும் அக்ஷயமாகக் களித்து அவர்கள்பூரண கிருபை செய்யுந் தினமென நூல்கள் கூறும்.

அமிசு—யதுகுலத்துதித்த ஒருவன். இவன்மகன் சாத்துவதன்.

அமிததேசன்—அருக்ககீர்த்தியின்புத்திரன். ஜைனன்.

அமிதாசுவன்—இக்ஷ்வாகுவமிசத்துப் பர்ஹிணசுவனுக்குமறுநாமம். கிருசாஸ்வன் தந்தை.

அமிர்தகடேசர்—திருக்கடவூரில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

அமிர்தகலைநாதர்—திருக்கலையநல்லூரில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

அமிர்தகவிராயர்-நூற்றுமுப்பது வருடங்கட்குள்பொன்னங்காலில்தோன்றிய ஒரு புலவர். இராமநாதபுரத்து இரகுநாத சேதுபதியின் மேல் ஒருதுறைக்கோவை யென்னும் அரிய பிரபந்தஞ் செய்தவர்.

அமிர்தசாகரம் — பிரதாபசிங்கனால் நோய்களின் விவரங்களையும் அவற்றின் சிகிச்சைகளையும் விரிவாக விளக்கிச் செய்யப்பட்ட ஒரு வைத்தியநூல்.

அமிர்தத்வஜன்—சண்டிக்கென் பிதா

அமிர்தநாயகி—திருப்பாதாளீச்சுரத்தில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

அமிர்தப்பிரபை—சுயம் பிரபையின் தோழி. [ற்காண்க.

அமிர்தமதனம்— க்ஷீராப்திமதனத்தி

அமிர்தமுகிழாம்பிகை— திருத்தருத்தியில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

அமிர்தவல்லியம்மை — திருப்பனங்காட்டூரிலும், திருக்கலய நல்லூரிலும் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

அமிர்தாம்சன்—சந்திரன். அமுதசொரூபமான தேகமுடைமையின், அபரபக்ஷத்திலே தேவர்கள் நாளுக்கொருகலையாக ஷோடசகலைகளையுமுண்ணுதலின் இப்பெயரேற்றனன்.

அமுதகடநாதர்—திருக்கோடிக் குழகரில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

அமுதசாகரர்-யாப்பருங்கலக்காரிகையியற்றியஒருஜைனவித்துவான்.

அமுதசுரபி—தென்மதுரையில் கலாநியமதீ உள்ள சிந்தாதேவியால் ஆபுத்திரனுக்குக் கொடுக்கப்பட்ட தெய்வத்தன்மையுள்ள ஒரு பாத்திரம். இது தன்னுட்பெய்த அன்னத்தை எடுக்குந்தோறுங் குறையாது வளரச் செய்யுந்தன்மையினது. சிலகாலம் ஆபுத்திரன் கையிலிருந்து பலவுயிர்கட்குப் பசித்துயரகற்றி, மணிபல்லவத்துள்ள கோமுகியென்னும் பொய்கையில் அவனாலிடப்பட்டு, சின்னாட்பின்னர் மணிமேகலை கையிற்சென்று, பலவுயிர்களின் பசித்துயரகற்றி..காய

சண்டிகையென்னும் ஒருவித்தியாதரமடந்தையின் தீர்ப்பசியாகிய பஸ்மகவியாதியையும்போக்கினது.

அமுதபதி—இரவிவன்மனென்னும் அரசன்மனைவி. தாராவீணா இலக்குமியென்னு மூவரையும் பயந்தவள்.

அமைவன்—அருகன்.

அமோகவர்ஷன — தொண்டைமண்டலத்தில் அரசுபுரிந்த ஒரு மன்னவன். ஜைனமதவிருத்தியில் மிகப்பிரியப்பட்டு அவன் காலத்தில் அதனைப்பரவச்செய்தவன். இவன் காலம் ஆயிரம் வருடங்கட்கதிகமாயின.

அம்சகீதை—அம்சரூபமான பிரமசாத்தியர்கட்கு உபதேசிக்கப்பட்ட கீதை.

அம்சன்—(1) யதுவமிசத்தவன். வசுதேவனுக்குச் சிதேவி பாலுதித்த இரண்டாம் புத்திரன். (2) டிசிகன் சகோதரன், இவன் கௌசிகனெனவும்படுவன்.

அம்சுமந்தன் } அஞ்சுமான் } (1) சூரியன் (2) இக்ஷ்வாகு வமிசத்து அசமஞ்சசன் புத்திரன், திலீபன்பிதா.

அம்சமாலி—சூரியன்.

அம்சுலன்—சாணக்கியன்.

அம்சுவன்—புருகோத்திரன்புத்திரன் சாத்வகன் பிதா.

அம்சை — மேருவின் வடக்கிலுள்ள ஒருமலை.

அம்பணத்தி—துர்க்கை.

அம்பரீஷன்—(1) இக்ஷ்வாகு வமிசத்து மாந்தாதா மகன். யாவனாசிவன்பிதா. (2) இரண்டாம் நாபாகன் புத்திரன். நபகன் பௌத்திரன் இவனுக்கு விருபன் கேதுமந்தன் சம்புவென்னுமூவர்மக்கள் விசேடித்த விஷ்ணுபக்தன். இவன் துவாதசிவிரதத்தை யனுஷ்டித்து வருகையில், துர்வாசமுனிவர் இவனிடம் வந்து எனக்கு இற்றைப்போஜனம் உன்பாலெனக்கூறி யமுனாநதிக்குச்சென்று தமதுகடன் முடித்து வருவதற்குச் சிறிது நேரம் அதிகப்பட்டமையின், இவன் விரதமுகூர்த்தந்தப்பிவிடுமெனக் கருதி ஆசமனீயஞ்செய்து கொண்டிருக்கையில், முனிவர் திரும்பிவந்து இவன் தன்னை மதித்திலனென வெகுண்டு தமது சடையிலொன்றனை யறுத்தெறிந்து இவனைச்சாம்பராக்குகவென விடுப்ப, அது தன்னை வருத்தாவண்ணம் அம்பரீஷன் விஷ்ணுவைப் பிரார்த்திக்க விஷ்ணுவின சக்கரம் அதனையெரிக்கும்படி விஷ்ணுவா லனுப்பப்பட்டமையின், முனிவர்ஒவ்வொரு தேவரிடஞ்சென்றும் அதனைத்தடுக்கமுடியாது கடைசியில் தன்னிடத்திலேயே வந்து பிரார்த்திப்ப அதனைத்தடுத்து அவரையனுக்கிரகித்தவன்.

அம்பர்—திவாகர நிகண்டினைச் செய்வித்த சேந்தனென்னும் பிரபுவாகிய சிற்றரசன்வசித்தவூர்.

அம்பர்கிழான் அருவந்தை— ஒரு வேளாண்பிரபு. இவனைப்பாடிய புலவர் கபிலர். திவாகர நிகண்டு செய்வித்தவன் இவனே.

அம்பர்நகர்க் கணபுரத்தேவன்—கனாநூல்பாடும்படி பொன்னவனுக்குப் புகன்றவன்.

அம்பஷ்டதேசம்—உசீநரன் மகனான சுவிரதனால் நிர்மாணஞ் செய்யப்பட்டதேசம். இத்தேசத்தவர் அம்

புவந்டரெனப்பபிவர்.

அம்பாத்திரயம்—மூன்று தேவிமார் இவர் ஞானாம்பா, பிரமராம்பா,மூகாம்பா எனப்படுவர்.

அம்பாலிகை } காசிராசன் குமாரத்திகள், அம்பையின் ச
அம்பிகை. } கோதரிகள் விசித்திரவீரியன்மனைவியர்; இவருள் அம்பிகை மூத்தவள். விசித்திரவீரியனுடைய மரணத்தின் பின்னர் தேவரநியாயத்தின்படி இவர்களிடத்தில் சத்தியவதியின் கட்டளையைப் பெற்று வியாஸமுனிவர் திருதராட்டிரபாண்டு மன்னர்களைப்பிறப்பித்தனர்.

அம்பிகாபதி—(1)சிவன் [உமைகேள்வன்] (2) கல்வியிற் பெரியகம்பன் புத்திரன். இவன் சிருங்காரரசம் பாடுதலில் மிக்கவன். இவன் அரசகுமாரியினை விரும்பி அவளுடன் நட்புற்றிருத்தலை யுணர்ந்த மன்னன் இவனைப் பேரின்ப வழியில் நூறுகவிகள் செய்யுமாறு பணித்து நகர்வலம் வருமாறு கட்டளையிட, அங்ஙனமே அவன் கூறிக் கொண்டு வருகையில், அரசகுமாரி இவன்சிற்றின்பச்செய்யுள்தனை பாடுவோனாகவின் இது வரையில் அப்படிப்பாடி இறந்திருப்பானென உப்பரிகையின் மேனின்று தலை தூக்கி அவன் வருகையைப் பார்த்துக் கொண்டிருக்கையில், அதுளைக் கண்டு "சற்றே பருத்த தனமேகுலுங்கத்தரளவடக்-துற்றே யசையக் குழைழூசலாடத்துவர்கொள் செவ்வாய்-நற்றேனொழுக நடனசிங் காத நடையழகின்-பொற்றே ரிருக்கத் தலையலங்காரம் புறப்பட்டதே" என்னுங் கவியைக்கூறி, தன்னுடன் வந்த அரசன் கட்டளையுற்றோரால் வெட்டப் பட்டிறந்தவன். இவன் பாடிய கோவை மிகச்சிறந்ததோரகப் பொருட்கோவையாம்.

அம்பிகை—பார்வதி.

அம்பிகைதனயன்—(1)விநாயகன்(2) முருகன் [உமைபுத்திரன்.]

அம்பிகைபாகன்—சிவன்.

அம்பிகைமுன்னோன்—விஷ்ணு.

அம்பிகையம்மை—திரு ஆப்பனூரில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம

அம்பை (1) பார்வதி (2) காசிராஜகுமாரி. காசிராஜன் இவளது கன்னிகைப் பருவத்தில் சுயம்வரம் வைத்துச்சாளுவராஜனுக்குக் கொடுக்க, வீடுமன் பலாத்காரமாகஇவளையும் இவள சகோதரிகள் அம்பிகை அம்பாலிகை யென்போரையும் கைப்பற்றிக்கொண்டு ஆண்டுற்ற மன்னர்களைப் போரில்தோற்றோடச் செய்து, தன் தம்பி விசித்திர வீரியனுக்கு மணஞ் செய்விக்கத் தொடங்குகையில், அம்பை முன்னரே சாளுவனுக்குத் தந்தையாற் கொடுக்கப்பட்டவளென்றுணர்ந்து சாளுவன் பாலனுப்பி மற்ற இருவரையும் மணஞ் செய்வித்தனன். அம்பை சாளுவனிடஞ் சென்று தன்னை மணக்கும்படி வேண்ட, அவன் வேறொருவனாற் சிறைசெய்யப்பட்டவளை மணம் புரியேனென, மீண்டும் வீடுமனிடம் வந்து அவனை மணஞ்செய்ய வேண்டியும் அவனது வித்தியா குருவாகிய பரசுராமனாற் சொல்வித்தும் அவன் கேளாமை

யால் அவளைச் சினந்து துருபத னுக்குச் சிகண்டியாகப் பிறந்து வீடுமனைக் கொன்றவள்.

அம்மங்கிப்பெருமாள் } இவ்விருவரு
அம்மங்கியாண்டான் } ம், வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால் வரிற் சேர்ந்தவர்.

அம்மூவனார்—ஐங்குறுநூற்றில் நெய் தற்றிணையைக் குறித்த இரண்டா நூறுபாடிய புலவர்.

அயகிரீவன்—திருமால்.

அயசிரை —வைசுவானரன் புத்திரி. கிருதுபாரி.

அயவந்தீசர்-திருச்சாத்தமங்கையிலே சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

அயனரிதீர்த்தம்—அயனும் அரியுந்த வஞ்செய்யக்கண்ட தீர்த்தம். இது திருவையாற்றிலுள்ளது.

அயன்—அஜன்.

அயிராபதேசர்--திருஎதிர்கொள்பாடி யில் சிவபிரானுக்கு வழங்குந்திரு நாமம்.

அயிராவணம் — கைலாயத்திலுள்ள இரண்டாயிரங்கொம்புடைய வெள்ளையானை. சிவபிரானுக்குரியது

அயிராவதம்-ஐராவதம்.நான்குகொம் புகளையுடைய வெள்ளையானை,கிழ க்குத்திக்கஜம், இது இந்திரனுக்கு ரியது.

அயிரூர்புகழியூர்—காவிரி வடகரையி லுள்ள நகரங்கள். நெடுஞ்செழிய னென்னும் பாண்டியன் அதியனெ ன்னுஞ் சிற்றரசனோடு போர்செய் து அவனைவென்ற இடம்.

அயிரை—ஒருநதி (சிலப்பதி)

அயுதஜித்—சகஸ்ரஜித என்பவனுக்கி ளவல், யதுவமிசத்தவன்.

அயுதாயு—(1) குருவமிசத் ததித்த இரதிகன் மகன் (2) சிந்துத்வீப னுக்குப் புத்திரன், இருதுபர்ண னுக்குப் பிதா, இவனுக்குப்பங்கா சுவனென்பதும் நாமாந்தரம்.

அயோத்தி — சூரிய வமிசத்தரசர்க்கி ராஜதானி, இது கோசலநாட்டிற் சரயுநதி தீரத்திலுள்ளது.போர்பு ரிதற்குரிய இயந்திரக்கருவிகளமை ந்தமதிலரிறப்போடு கூடியது,இது சப்தபுரிகளுளொன்று.

அயோமுகன்—சஞ்சுபுத்திரருளொரு வன.

அயோமுகி—தண்டகாரணியத் திரு ந்த ஓரரக்கி.இலக்ஷ்மணனால் காது நாசி ஸ்தனமுதலியன கொய்யப் பட்டவள்.

அயோநிஜை—சீதாதேவி இவள் ஜன கராஜன் பொற்கொழுகொண்டு யா கநிலத்தை உழுகையில் பூமியினி ன்று கண்டெடுக்கப்பட்டமையின் இப்பெயரேற்றவள் [யோனிவழிப் றவாதவள்]

அரங்கம்—திருவரங்கம் அல்லது ஸ்ரீ ரங்கமென வழங்கும் வைணவத்தி ருப்பதி. இதனைக் கோயிலென்றும் திருவரங்கம் பெரிய கோயிலென் றும் வழங்குவர் [ஆற்றிடைக்குறை] "ஆற்றிடைக்குறையை யரங்கமெ ன்ப"என்பது சூத்திரம்.

அரசகேசரி— ஈழநாட்டரசனான பர ராஜசேகரன மருமகன்,இவன் கல் வி போர்த்திறமுதலியவற்றிற் சிற ந்தவன். இவனாற் செய்யப்பட்டது இரகுவம்சமென்னும் அரியபெரிய தோர்நூல்.இயனூல். அது சொன்ன யம் பொருணயம் கற்பனை அலங் காரமுதலியன நிரம்பிய 2500 விரு த்தங்களையுடையது.

அரசிலிநாதர்—திரு அரசிலியில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

அரசை—சுக்கிரன் மகள். இக்ஷ்வாகுவின்மகன் தண்டன் பலாத்காரமாக இவளைப்புணர்ந்தமையைச் சுக்கிரனுணர்ந்து அங்கு மண்மாரிபொழியச்செய்தனன். அவ்விடம் தண்டகாரணியமென்ப.

அரட்டன்—சேரநாட்டிலிருந்த ஒரு செட்டி. கோவலனுக்கும் கண்ணகிக்கும் நேர்ந்த துன்பத்தை மாடலனாலறிந்திறந்த பெருமனைக்கிழத்தியும் கண்ணகிதாயும் இவனுக்குப் புத்திரிகளாய்ப் பிறந்தனர்.

அர்ணபாதம் — ஜினாலயமுள்ள ஒரு மலை.

அரதத்தாசாரியர்--கஞ்சனூரிலேமதுசூதனாசாரிய ரென்னும் பிராமணருடைய புத்திரர். இவர் வைணவராய்ப்பிறந்தும் சைவநூலாராய்ச்சியாற் சைவராயினமை பொறாத வைணவப்பிராமணர் சிலர் நீர்கொண்ட சைவசமயம் உண்மையாயின் நாங்களிடும் காய்ச்சிய இருப்புப் படியின்மேனின்று நுஞ்சமயத்தை நிலை நாட்டுக என, அதற்கிணங்கி அங்ஙனமே பழுக்கக்காய்ச்சிய இருப்புப்படி மேனின்று சிவபரத்துவநிரூபணஞ் செய்தவர். இவரியற்றிய நூல்கள் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், ஹரிஹர தாரதம்மிய முதலியன.

அரத்துறைநாதர்—திரு நெல்வாயில் அரத்துறையில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

அரபத்தநாவலர்--திருப்பெருந்துறையிற்பிறந்த ஒருவேளாண் புலவர் இவர் தமிழிற் பரதநூலாசிரியர். அது. மூந்நூற்றுத் தொண்ணூற்றாறு செய்யுள்களையுடையது.

அரம்பை — ஓரப்சரசு. நளகூபரன் மனைவி, இவளை இராவணன் வலியப்புணர்ந்தமை யுணர்ந்த நளகூபரன் விருப்பில்லாத மாதரைப்புணரின் சிரம்வெடிக்க என இராவணனைச்சபித்தான்.

அரர்—ஜைனமதஸ்தாபகரான இருபத்து நான்குதீர்த்தங்கரரில்பதினெட்டாவதாகத் தோன்றியவர்.

அரவக்கொடியோன்--துரியோதனன்.

அரவணிந்தோன்—சிவன்.

அரவணைச் செல்வன்—திருமால்

அரன்—(1) சிவன் (2) ஏகாதச ருத்திரருளொருவன் (3) மாலியவான் மகன். விபீஷணன் மந்திரி.

அரன்றோழன்—குபேரன்.

அரி—(1) திருமால் (2) சூரியன் (3) சேஷன்.

அரிகண்டன்—கீதமாநகர ராஜகுமாரன். [சூளாமணி]

அரிகேது—ஒரு வித்தியாதரன், அரிமஞ்சுவின் விருப்பத்தின்படி மாயாசிங்கமாகத் திவிட்டனிடஞ்சென்றிறந்தவன்.

அரிசரண்—சிவன்.

அரிசில் } ஒருநதி இது சோழநாட்
அரசிலி } டிலுள்ளது.

அரிசிற்கரைப்புத்தூர் — காவிரியின் தென்பாலுள்ள ஒரு சிவஸ்தலம்.

அரிசிற்கிழார்—அரிசிலென்னுமூரில் வேளாண் குலத்திலுதித்த கடைச்சங்கப்புலவர். திருவள்ளுவமாலை பாடியவருளொருவர். பேகனென்னும் வள்ளலாற் றுறக்கப்பட்ட கண்ணகியை அவனொடுசேர்த்தல்

வேண்டிப்பாடியவர். அதிகமான்நகரோ பொருதவீழ்ந்தஎழினியின்பிரிவாற்றாது புலம்பினவர். பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தினைப்பாடி, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையிடம் ஒன்பது நூறாயிரம் பொற்காசு பரிசில் பெற்றதன்றி அவன்கொடுத்த அரசிற்குரிய சிங்காசனத்தை, மீட்டும் இரந்து அவனுக்கேகொடுத்து அவன்பால் மந்திரத்தலைமை பூண்டவர்.

அரிசேனன்—ஒரு வித்தியாதரன், அச்சுவகண்டனுக்குத் தோழன்

அரிச்சத்திரம்-பாரதப்போரில்கௌரவர்சேனை தங்கியிருந்தஸ்தானம்.

அரிச்சந்திரன்—இடையெழு வள்ளல்களிலொருவன். சூரியவமிசத்தில் திரிசங்கு புத்திரன். இவன் மனைவி சந்திரதயன் புத்திரி சந்திரமதி. மகன் உலோகிதாசியன். இவன் சத்தியமே விரதமாகக் கொண்டவனென்று வசிட்டர் இந்திரசபையிற்கூற, ஆங்கிருந்த விசுவாமித்திரர் அவனைப் பொய்யனாக்குவேனென்று பலபடப் பரிக்ஷைசெய்தும், நாடுநகரம் மனைவி மைந்தன் முதலியயாவுமிழந்தும் சத்தியத்தைக் கைவிடாதுபுகழுடம்பு பெற்றவன். ஷட்சக்கிரவர்த்திகளிலொருவன். இவன் பூர்வஜன்மவரலாற்றினை நீலலோகிதனிற் காண்க.

அரிடிகம்—சிற்பநூல்கள் முப்பத்திரண்டினுளொன்று.

அரிணங்கன்—சந்திரன்.

அரிதன்—(1) க்ஷத்திரியனாயவனாசுவன் மகன். தவத்தாற் பிரமரிஷியானவன். இவன் மரபினர் ஆங்கிரச அம்பரீஷ யவனாசுவ வமிசமாகப்பிறந்தவர்கள். (2) இக்ஷவாகுவமிசத்து லோகிதாசியன் மகன். சம்பன் பிதா.

அரித்துவாரம்—விஷ்ணுவினாற் கொல்லப்பட்ட மதுவென்னுந் தானவன் புண்ணியத்தலமாம்படி வேண்ட அவ்வாறான இடம். இது கங்காத்துவாரமென்றுஞ் சொல்லப்படும்.

அரிமஞ்சு—அச்சுவக்கிரீவன் மந்திரி. அரிகேதுவென்னும் வித்தியாதரனைத் திவிட்டனிடம் மாயாசிங்கமாக ஏவினவன்.

அரிமருகன்—(1) கணபதி (2) முருகக்கடவுள்.

அரிமர்த்தனன்—மதுரையையாண்ட அறுபத்துமூன்றாம்பாண்டியன். வலைவீசியது, வாதவூரடிகளுக்குஉபதேசித்தது, நரிபரியாக்கியது, பரிநரியாக்கியது, பிட்டுக்கு மண் சுமந்ததாகிய இவ்வைந்து திருவிளையாடல்களும் இவன்காலத்தில் நிகழ்ந்தன. திருவாதவூரடிகள் இவனிடத்திலே தான் மந்திரத்தலைமை பூண்டிருந்தனர்.

அரியங்கன்—சம்பன்மகன்.

அரியசுவன்—திஷ்டகேதுமகன்.

அரியரதாரதம்மியம்—அரதத்தாசாரியராற் செய்யப்பட்ட ஒருவடமொழிநூல். இது அரிக்கும் அரனுக்குமுள்ள தாரதம்மியங்களை ஒவ்வொரு வகையாய் விளக்கி, சிவபெருமானுக்கு ஏற்றங்கூறும் நூறுசுலோகங்களையுடையது.

அரிஹரபுத்திரன்—திருமால் மோகினிவடிவேற்று க்ஷீராப்தியில் அமிர்தம் பகிர்ந்தபொழுது சிவபெருமானைக் கூடிப்பெற்றபுத்திரர். ஐயனாரென்னும் பெயர் கொண்டவர்.

இவர் வாகனம் வெள்ளையானை. இவர்தேவிமார் பூரணைபுட்கலையென்போர். நிறம் கடல்வண்ணம். ஆயுதம் செண்டு. இவரே சூரபன்மனுக்கஞ்சிய இந்திரனது வேண்டுகோளால் ஐராணியைக்காத்து ஒப்புவித்தவர். அவளை அஜமுகி பெயடுக்கவருகையில் இவர்கட்டளைபெற்ற வீரமாகாளர் அவள்கையை யறுத்தனர்.

அரியரன் — சேக்சவார்த்தமூர்த்தியிற்

அரியேறு—துர்க்காதேவி. [சாண்க.

அரிவாட்டாயநாயனார்-அறுபான் மும்மை நாயன்மார்களுளொருவர். திருக்கண்ணமங்கையில் வேளாண் குலத்திலுதித்து நாடோறுஞ் சிவாலய நிவேதனத்திற்கு அரிசியும் மாவடுவும் கொடுத்துவந்து, ஒருநாள் அவற்றைக் கொண்டு செல்கையில் வழியிலிடறிவீழ்ந்து அவையாவும் ஒருநில வெடிப்பில் விழுந்துவிடநியதிகெடுதலின் இனியென்னசெய்வேனென்றுதமது ஊட்டியை அரிவாள்கொண்டரிகையில், சிவபெருமான் அக்கமரில் அதனையுண்டோமெனமாவடுவைக்கடித்துக்கொண்டு திருக்கரத்தை நீட்டி அரியவொட்டாது தடுத்து முத்திகொடுக்கப் பெற்றவர்.

அரிட்டநேமி—(1) சகரசக்ரவர்த்திக்கு ஞானோபதேசஞ் செய்த ஒரு பிரஜாபதி. (2) குருஜித்து.

அரிட்டன்—(1) தநுவின் புத்திரன். (2) ஓரசுரன். இவன் இடபரூபந்தாங்கிக்கிருஷ்ணனை முட்டிக்கொல்ல யத்தனிக்கையில் அவனாற் கொல்லப்பட்டவன். (3) மித்திரனுக்கு ரேவதியென்பாளிடம் பிறந்த ஜேஷ்டகுமாரன்.

அரீதன்—விசுமித்திரன்புத்திரன். இவன் வயிசத்தவர் ஹரீதவேதியரெனப்படுவோர்.

அரு—கடவுள்.

அருகன்—ஆருகதமதக்கடவுள். இவர் ஆக்கல் அழித்தல்களைச் செய்யாதவரென்றும், ஆதிமத்தியாந்தரகிதரென்றும், எல்லா வுயிர்களிடத்தும் நீங்காக்கிருபையும், அநந்தஞானம் அநந்தசக்தி அநந்தானந்தமுதலிய குணங்களும், மூன்று தர்மசக்கரங்களும், நான்கு திருமுகங்களும், பொன் மணி முத்துக்களாலாகியமுக்குடையும், கன்மரகிதமும், அசோகினீழலிலிருக்கையு முடையரென அருகசமயநூல்களானுணரப்படும். இச்சமயத்தவர் முன்னொருகாலத்திற் பிரபலப்பட்டிருந்து இக்காலத்தில் மிகச்சிலரே காணப்படுகின்றனர்.

அருக்ககீர்த்தி—ஜடியரசன்மகன். திவிட்டினன் மைத்துனன்.

அருக்கசந்திரன்-குண்டலகேசிக்குப் பௌத்தமதோபதேசஞ்செய்த ஆசிரியன். இவன்உஞ்சமாநகரத்திருந்தவன்.

அருக்கன்—(1) சூரியன் (2) புரூரவன்வமிசத்து இருக்ஷன். (3) இந்திரன்.

அருசிமாலை—மருசியின்தாய்.

அருச்சுனன்—குருமரபினன், பஞ்சபாண்டவருளொருவன். இவன் பாண்டு புத்திரனாக இந்திர பிரசாதத்தால் குந்திதேவியிடம் பிறந்தவன். இவன் துரோணாசாரியனிடம் வில்வித்தை பயின்றவன். துருபதனைப் போரில் வென்று தேர்க்காலிற்கட்டிச் சென்று ஆசிரியனுக்

குக் குருகாணிக்கையாகக் கொடுத்தவன். யாவராலும்வெல்லப்படாத யவனராஜனை வென்றவன். "வில்லுக்கருச்சுன னென்று" சிறப்பித்துச் சொல்லப்படுபவன். வில்லாளிகளை யெல்லாம் மயக்கிய மச்சயந்திரத்தை ஒரம்பால் வீழ்த்தித் திரௌபதியை மாலையிட்டவன். தவஞ்செய்து சிவபிரானிடம்பாசுபதாஸ்திரம் பெற்றவன். சிவபெருமானுடன்மற்போர்புரிந்தவன். வில்வித்தையில் ஒப்பாருமிக்காருமில்லாதவன். *ஒரே நாளில் ஏழக்குரோணி சேனைகளை மாய்த்தவன். அக்கினிதேவனுக்குக் காண்டவவனத்தைஆகாரமாக்கிஅவனால்காண்டிபமுதலியன பெற்றவன. இதுவே யிவன்வில். தேவதத்தம் சங்கம். இவன் மனைவியர் திரௌபதி உலூபி சித்திராங்கதை சுபத்திரை யெனும் நால்வர்.

அருச்சுனன் பற்குனன் பார்த்தன் கிரீடி சுவேதவாகனன் வீபற்சு விஜயன் கிருஷ்ணன் சவ்வியசாசி காண்டீபன், கேசவர்க்குத்தோழன் தனஞ்சய னெனப்பன்னிருபெயருற்றோன். அருச்சுனன்=மரகதமணிபோல் நிறமுடையவன். பிறவற்றின் காரணங்களைஅவ்வவ்வரிவடிவிற்கண்டு கொள்க.

அருணகிரிநாதர்—திருவண்ணாமலையிலிருந்த ஒரு உருத்திரகணிகைக்குப் புத்திரராகத்தோன்றினவர். இவரது இளமைப்பருவத்திலேயேஇவரது தாயிறந்தமையின், தமது சகோதரியிடம் வளர்ந்து குமாரக்கடவுளின் திருவருட் பிரசாதபலத்தால் தம்மில்ஒப்பாருமிக்காருமின்றிச் சந்தக்கவி பாடுதலில் வல்லுநராய், அருணாசலத்தில் எழுந்தருளியிருக்கையில், ஸ்ரீவில்லிபுத்தூராழ்வார் ஆங்குற்று இவர்சந்தம் பாடுதலில் வல்லவரென்றுணர்ந்து பிரபுடதேவராஜனது விருப்பின்படி இவரோடு வாதுசெய்து வருகையில் கந்தரந்தாதியைக் கூறிவர, ஆழ்வார் பொருள்சொல்லிக் கொண்டு வந்து, தகர விகற்பச் செய்யுளொன்றுக்குப் பொருள் கூற மயங்கித் தோல்வியுற்று, தம்மிடந் தோற்றவர் காதுகளைத தாமரிந்து கொண்டுவந்தது போலத் தமது காதையரிந்து கொடுப்ப வியைய, இனியொருவர் காதினையும் அரியாத வரமெனக்குத் தருகவென்று அவரைக்காதுகளோடு செல்ல விடுத்தவர்.

அரசன் பின்னர், சம்பந்தாண்டானென்னும் சத்தியுபாசக ரொருவரும் அருணகிரிநாதரும் பிரபுடதேவராசனுக்கு மிக நெருங்கியவர்களாயிருந்தமையின், அரசன் சம்பந்தாண்டானைச் சத்தி தரிசனஞ் செய்விக்கவேண்டுமென்றும், அருணகிரிநாதரைச் சுப்பிரமணிய தரிசனஞ் செய்விக்க வேண்டுமென்றும், பன்னாள் பிரார்த்தித்துவந்தானாக, சம்பந்தாண்டான்குறித்தவொரு தினத்திற் சத்தியைக் காட்டுவேனெனச் சபதஞ்செய்து தேவியை வேண்ட, சத்தி "நீயெமதன்பனுகலின் தரிசனந் தந்தாம். அரசன்முன்னர் வரோம்" எனமறுப்ப 'அங்ஙனமாயின், அருணகிரிநாதர் விருப்பின்படி முருகக்கடவுள் அங்கெய்தாது காத்து வுன்னைக் கனப்படுத்துக',

என்றுவேண்டிக்கொண்டமையின் மனாசேவி, முருகக்கடவுளைக் குழந்தையாகச் செய்து தம்மடிமீதிருத்தி விளையாடிக் கொண்டிருந்தமையின், அருணகிரிநாதர்நியமனப்படி அருணாசல வடகோபுரத் தம்பத்தில் வருவித்துக்காட்டிவியலாதுதடைபட, அருணகிரியார் சீர்பாத வகுப்பு கடைக்கணியல் வகுப்பு வேல்வகுப்பு முதலியவொவ்வொன்றனால் துதித்தும் அறுமுகப்பெருமான் ஆர்கடையாமை கண்டு, மயில் வகுப்பினையோதி அதனையனுப்ப அது ஆங்குற்று நிருத்தஞ்செய்து கொண்டிருக்கையில், இறைவர் அதன் மீதாரோகணித்து அருணகிரியார் விருப்பின்படி பிரபுடதேவராஜனுக்குக் காக்ஷி தந்தருளினர். அவ்வாறுமுகனைரைக் கண்ட பிரபுடதேவன் கண்கள் ஒளியின்றி மாழ்க அருணகிரியார் விபூதி பிரசாதித்துக் கண்ணொளியை விளக்கினர். இது முதல் *சம்பந்தாண்டாருக்கு இவரிடம் பகைமை யதிகரித்து எவ்வாற்றானும் இவரை முடிக்கவேண்டுமென்னுங் கருத்து மனத்துள்ளேயுண்டாயிருந்தது.

பின்னொருகாலத்தில்மன்னவன் அவ்விருவரையு நோக்கிக் கற்பகமலரைக் கொண்டுவரவல்லீர் யாவரென, சம்பந்தாண்டார் அருணகிரியாரே அஃதாற்றுவரென்று கூறி அதனை யியற்ற வற்புறுத்தினமையின், அவ்வேண்டுகோளுக்கிணங்கி அருணை நெடுங்கோபுரத்தில் தமது பூதவுடலை யிட்டு ஆங்கிறந்து கிடந்த ஒரு கிள்ளையினுடலிற் பிரவேசஞ்செய்துதேவருலகடைந்து ஒருகல்லை [சொன்னை] யில்நிறிது மலர்களைக் கொண்டு திரும்பினர். அதனுள் சில தினங்களாயினமையின் சம்பந்தாண்டார் அருணகிரியாரது விர்த்தாந்தங்களையுணராது அவரெங்ஙனமெய்தினரெனத் தேடிக் கோபுரத்து விட்ட உடலைக் கண்டு அரசனிடத்தெய்தி "அருணகிரியார் கற்பக மலர் கொண்டுவர முடியாது உயிர்விட்டனர். அவர் பெரியராகலின் அவர் தேசத்திற்கு உடனே சம்ஸ்காராதிகள் செய்துமுடிப்பது தகுதி" என்று கூறி அங்ஙனமே செய்வித்தனர். கிளியுருக் கொண்டு மலர்க்கல்லையை வாயிலேந்தி வந்த முருகக் குழவி கோபுரத்தில் விட்ட உடலைக் காணப்பெறாது மன்னவன் சபையை நோக்கி வந்தனர். அவர் அந்நகரையடையுமுன்னரே தெய்வமணம் நகர் முழுவதுங் கமழ யாவரும் இஃதென்னெனவியக்கையில் கிளியுருவொடு அம்மலரைஅரசன் முன்வைத்து, மன்னனாமுதலியோர் தாம் செய்த அபசாரத்தைப் பொறுக்கவென வேண்ட அங்ஙனமே யங்கீகரித்து, கந்தரனுபூதி கந்தரலங்காரம் பல திருப்புகழ்கள் முதலியன அருளிச்செய்து சிலகாலம் அருணகிரியில் பலர்க்குங் காக்ஷிதந்திருந்து முருகக்கடவுள் திருக்கரத்தில் அச்சுகவடிவாகவே விளங்கியிருக்கின்றனர்.

ஸ்ரீவில்லிபுத்தூராழ்வார் இவர் பால்தோற்றன ரென்பது சைவர் கொள்கையும், அவர்கள் ஒருவரோடொருவர் வாதித்ததில்லை யென்

பது வைணவர் கொள்கையுமாம்.

இவரியற்றிய சுந்தராந்தாதி மிகப் பொருட்செறிவுடையதொரு நூல். திருப்புகழின் கவித்தொகையைப் பதினாறாயிரமென்ப.

அருஞ்சயன்—(1) இக்கிரசஞ்சயராஜ குமாரன் (2) விஜயை பாட்டன்.

அருட்டை—காசிபர் மனைவியருளொருத்தி. ஒந்தி உடும்பு முதலியன பெற்றவள்.

அருணந்திசிவாசாரியர்— ஆதிசைவர். திருத்துறைப்பூண்டியிற் றோன்றியவர். இவர் சந்தானாசாரியரெனும் சைவசித்தாந்தோபதேசஞ்செய்த நால்வருளொருவர். மெய்கண்டதேவருடைய மாணவர். இவராற் செய்யப்பட்டவை சிவஞான சித்தியாரும் இருபாவிருபஃது மென்ப. இவர்க்குச் சகலாகமபண்டிதரென்றும் நாமாந்தரம் வழங்கும்.

அருணபுரத்தாழ்வான்—வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வருளொருவர்.

அருணபுரத்து நம்பி——வைணவசிங்காசனாதிபதிகளெழுபத்துநால்வருளொருவர்.

அருணன்(1) தானவன். முராசுரன் மகன். கிருஷ்ணனாற் கொல்லப்பட்டவன் (2) சூரியன் (3) சூரியன் இரத சாரதியான முடவன், இவன் கருப்பத்திலிருந்த போது அண்டஜத்தை அவன்றாய் நெருக்கினமையின் *உறுப்புக்கள் நிரம்பப்பெறாது (தொடையின்றி) ஜனித்தவன்.

அருணாசலம் — பஞ்சபூதஸ்தலங்களுள் தேயுஸ்தலம். நடுநாட்டிலுள்ளது. இது சிவவடிவம். பிரமவிஷ்ணுக்கள் இறுமாப்புற்றபோது அக்கினிமலையாகத் தோன்றி அவர்களில் பிரமன் அன்னமாகி முடியையும் திருமால் பன்றியாகி அடியையுந்தேட எட்டாது நின்றது. [அக்கினிமலை; ருணத்தை நீக்கும் மலை.] எனப்பொருள்படும்.

அருணாசுவன்—இக்ஷ்வாகுவமிசத்துப் பரிகிணாசுவனுக் கிரண்டாம் புதல்வன்.

அருணாஸ்பதம்--ஒருநகரம்இது வருணைநதி தீரத்திலுள்ளது.

அருணாதித்தன் — பன்னிரு சூரியருளொருவன். காசியில் அருணனால் பூசிக்கப்பட்டவன்.

அருணி—(1) பிரம மானச புத்திரருளொருவன் (2) வசுமகன்.

அருண்மொழித்தேவர்— சேக்கிழார் சுவாமிகளுக்கு நாமாந்தரம்.

அருந்ததி—கர்த்தமப் பிரஜாபதியின் புத்திரி. வசிட்டமுனிவர் பாரியை. ஒரு காலத்தில் சிவபிரான்பாலவேடந்தாங்கித்திகம்பரராய் வந்தபொழுதும் மனங்கலங்காத சிறந்த கற்புடையவர்.

இந்திரன் அக்கினி சூரியன் இம்மூவரும் இவர் கற்பினைச் சோதிப்பான்வர, அச்சமயம் தண்ணீர்க்குக் குடங்கொண்டு செல்வது கண்டு, அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மகிமையால் அக்குடத்தைக் காற்காற்பங்கு நீருள்ளதாகச்செய்ய முக்காற்குட நீருண்டாயது கண்டு தமது கற்பினன்மற்றைக் காற்பங்கு நீரையு நிரப்பிப் பூரணகுடமாக்கியவர்.

அக்கினிதேவன் சப்த விருடியர் மனைவியர்மேல் மோகங்கொண்டு வருந்துவதையறிந்த அவன்

மனைவி சுவாகாதேவி அவ்விருடி
மன்னையருருவில் ஒவ்வொன்றாகவ
ந்றுவந்து கணவனை யணைந்துசுகந்
தந்து அருந்ததியின் உருவேற்க
முடியாமல் அருந்ததியை விசேட
மாகத்துதித்து நீயே கற்புக்கரசி,
உன்னையே உலகினர் துதித்துங்
கற்படைகவென வரங்கொடுக்கப்
பெற்றவர். ஆகலின் விவாககால
த்தில் நக்ஷத்திர ரூபியாயிருக்
கும் அருந்ததியைச் சுட்டிக்காட்டி
இவ்வருந்தியைப் போலப் பதிவிர
தையாயிருவென நாயகன் நாயகிக்
குக்கூறுதல் மானுடர்வழக்காயது.

அருந்ததி நக்ஷத்திரம்— துருவநக்ஷத
திரத்திற்கு அருகிலுள்ள[சப்தருஷி
நக்ஷத்திரகணம்] எழுநக்ஷத்திரத்தி
ல்நடுவிலுள்ள வசிட்ட நக்ஷத்திரத்
திற்கருகில் சிறிதாயுள்ளது.சப்தரு
ஷிமண்டலம்இரண்டாயிரத்தெழு
நூறு வருடங்களில் ஒருமுறைவட்
டஞ்செய்யு மென்பர்.

அருந்தவநாயகி—திருப்பழூரில் உ
மாதேவியாருடையதிருநாமம்.

அருந்தோளம்மை — திருத்தெளிச்
சேரியில், உமாதேவியாருடைய
திருநாமம்.

அருமருந்து நாயகி—திருந்துதேவன்
குடியில்.உமாதேவியார் திருநாமம்.

அருள்நாயகி—திருஅறையணி நல்லூ
ரில் உமாதேவியார் திருநாமம்.

அர்ச்சராதிமார்க்கம்—சகுணப்பிரமத்
தை யுபாசிப்பவர்கள் சூரிய சந்திர
வித்யுல்லோகங்களின்மார்க்கமாகப்
பிரமலோகஞ்செல்லு மார்க்கமாம்.

அர்ச்சி—பிருது சக்கரவர்த்தியின்பட்
டமகிஷி.

அர்ச்சிகபர்வதம்—வைடூரியமலை

அர்ச்சுனன்—அருச்சுனனிற் காண்க.

அர்ச்சுனி—(1) வாணாசுரன்புத்திரி.
(2)ஒருநதி.இதுவாகுதையெனவும்
பெயர்பெறும்.

அர்த்ததர்சி—புத்தர்கள்இருபத்தெழு
வரில் பதினேழாவதாகத்தோன்றி
யவர்.

அர்த்தநாரீச்சுரர்—(1) அர்த்தசரீரம்
உமாதேவியாருருவை வகித்த சிவ
மூர்த்தி. இது சிவத்தையே பணிந்
து சத்தியை யவமதித்த பிருங்கி
முனிவனுடைய தேகத்திற் சத்தி
யின் கூறாகிய உதிரமாமிசங்கள்
நீங்கினமையின், அவன் இயங்குதற்
கு மியலாது துன்புற்றதுகண்டு அவ
னுக்குச் சிவபிரான் தண்டொன்
றளித்து அருள்புரிய, தேவிமீண்
டும் இவ்வாறு நிகழாது தானுஞ்சத்
தனோடு ஒருவடிவாய் அபின்னையா
யிருத்தல் கருத, அவ்வண்ணமே
அருள்புரிந்த மூர்த்தம். (2) திருக்
கொடி மாடச் செங்குன்றூரிலே
சிவபெருமானுக்கு வழங்குந்திருநா
மம். அங்கு இறைவன் அவ்வுருவா
யிருக்கின்றனர்.

அர்த்தநாரீசுவரி—(1) அர்த்தநாரீசுவர
த்திற் காண்க. இவ்வடிவாக இட
பாகம் பெறற்கு உமாதேவியார்
கேதார க்ஷேத்திரத்திற் றவங்கி
டந்தனரெனப் புராணங்கள் கூ
றும். (2) திருக்கொடி மாடச்செங
குன்றூரிலே உமாதேவியாருக்கு
வழங்குந்திருநாமம்.

அர்த்தரதன்—ஒரு வில்லாளியோடு
போர்புரியச் சக்தியுடையான்.

அர்த்தாவசு—ரைப்பியன் புத்திரன்.
ரைப்பியமுனிவன் அவக்கிரீதன்
கர்வித்திருந்தமைக்காகத் தன் கோ

யாக்கினியிலுதித்த ஓரிராக்கதனால் அவனைக் கொன்றபோது பிழைப்பித்தவன்.

அர்ப்புதாசலம்—ஒருமலை. அநர்த்த தேசங்கட்கருகிலுள்ளது. ஆருகன் ஆருகியெனபோர் வசித்த இடம்.

அலகநந்தை—கங்காநதிக் கிளைகளுளொன்று.

அலகைபுலகு—சுசியின்றிச்சிவபூஜை மந்திரஜபம் முதலியனசெய்தோர் அடையும் ஒருலகு.

அலங்காரநாயகி—திரு அரதைப்பெரும்பாழியில் உமாதேவிக்கு வழங்குந்திருநாமம்.

அலங்காரமாலை-இலக்கணையின்சேடி

அலந்தன்—சூரியவமிசத்து நாபாகன் மகன். இவனுக்குப் பலந்தனென்றும் நாமாந்தரம். வச்சிர பிரீதியின் பிதா.

அலம்பசன்—(1) பகாசுரன் தம்பி (2) பகாசுரன் மகன். இவ்விருராக்கதரும் கடோர்க்கசனாலிறந்தவர்.

அலம்பசை—இக்ஷ்வாகு வமிசத்துத் திருணவிந்துமனைவி. விசாலனைப் பெற்றவள்.

அலர்க்கன்-காசிராஜவமிசத்துக் குவலயாசுவன் மகன். தத்தாத்திரேயரிடம் யோகம்பயின்றவன். இவன்மைந்தன் சந்நதி யென்போன்.

அலாதன்—ராக்ஷசன், பிரகலாதனுக்கிளவல், இவனுக்கு அநுஹலாதனெனவும் நாமாந்தரம்.

அலாயுதர்—ஒரு வீரசைவர், சிறுத்தொண்ட நாயனார் தம்குமாரரைக் கொன்றனரென்றும், சிவபெருமான் அவ்வூனைப் புசித்தனரென்றும், அவ்விருவரையும் புறம்பெனக்கொண்டு புறக்கணித்து மீண்டும் அவர்கள்கேட்க அங்கீகரித்தவர்.

அலாயுதன்—பலராமன்.

அல்லமாப்பிரபு—சிவாமிசமாயுள்ளவர், மாயைக்கதீதப்பட்டவர், யாவர் மனத்தையுமுணர்ந்தவர், கரத்தில் இலிங்கமுடையவர், வசவேசர் லக்ஷத்தெண்பதினாயிரம் சங்கமர்கட்குச்சமைத்த அமுதமனைத்துந் தாமேயுண்டவர் [வீரசைவர்.]

அல்லி—சித்திரவாகபாண்டியகுமாரி, இது காரணமாக இவளுக்குச் சித்ராங்கதை யெனத் தந்திராந்த நாமம்வழங்கும். கல்விதநுர்வித்தை முதலியவற்றிற் றேர்ச்சியடைந்து பிதாவினனுஞையால் பாண்டிநாட்டின் தென்பாகத்துக் கரசியாகிஇலங்கைத்தீவிலுமொருசிறிது சுவாதீனஞ் செய்துகொண்டு கடலில் முத்தெடுப்பித்து வந்தவள். தீர்த்த யாத்திரைவந்த அர்ச்சுனனால் மணக்கப்பட்டவள்.

அல்லியங்கோதை—திருப்புள்ளமங்கையில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

அவக்கிரீவன்—பரத்துவாசருஷிகுமாரன், தவமகிமையால் வேதமுதலியவற்றை ஓதாதுணர்ந்து கர்வமுற்றமைகண்டு ரைப்பியமுனிவர்கோபிக்க, அக்கோபாக்கினியிலிருந்தோரிராக்கதனுதித்து இவன்கர்வத்தையடக்கிக்கொல்ல, ரைப்பியமுனிவர் மகனான அர்த்தாவசு மனமிரங்கித் தேவரைப்பிரார்த்தித்து உயிர்பெறச்செய்யப் பிழைத்தவன்.

அவந்தி—மாளவநாட்டிற் சிராஜதானி நகரம், இது அநேகமன்னர்க்கு ஜயமளித்த நகரமாதலின் உஜ்ஜயினி யெனவும் வழங்கும். விக்கிரமார்க்

கன் முதலியோர் இங்கிருந்தவர். இந்த நகரம் ஒரு விசேஷித்த சிவஸ்தலம் இவ்விடத்தில்மகாகாளேசுவரர் எனுநாமத்துடன் பக்தர்களது பிரார்த்தனைக்குப்பரமேசர்பிரசன்னராக விளங்குவர். இங்கேவழிபட்டோர்க்கு அநுக்கிரகஞ்செய்யும் மகாகாளி யொருத்தியுளள் என்பது உலகப்பிரசித்தி.

அவலோகிதேசுவரன் —ஒருபௌத்தமுனிவன், நெடுங்காலம் பொதியமலையில் வசித்தவன்.

விகாரவாத சைவன் — வெயிலில் நடந்தவர் அடையு நிழல் போல, ஆன்மா பக்குவமடைந்த, விகாரமின்றிநின்ற பதியை ஞானக்கண் பெற்று அடையுமென்பவன்,இவன் அகப்புறச் சமயிகளி லொருவன்.

அவிநயர்—அகத்தியர்மாணவர் பன்னிருவரிலொருவர்.இவராற் செய்யப்பெற்ற யாப்பிலக்கண நூல் அவிநயர் யாப்பென வழங்கும்.

அவிநாசியப்பர் — கொங்கு நாட்டிற் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

அவிமுக்தம்—காசி [விடத்தகாதது.]

அவிரோத வுந்தியார்--ஒருநூல், சாந்தலிங்க சுவாமிகளியற்றியது.

அவிரோதியாழ்வார்— திருநூற்றந்தாதியெனு நூலியற்றிய ஓர் அருகர்.

அவிர்த்தரன்—விஜயாசுவனெனும் அந்தர்த் தானனுடைய இரண்டாம் மனைவியான நபஸ்வதிமகன். இவனுக்குப்பிராசினபர்ஹி கயன் சுக்கிலன் கிருஷ்ணன் சத்தியன் ஜிவிரதனெனும் ஆறு புத்திரர்கள்.

அவிர்ப்புக்கு—புலஸ்தியன் மனைவி, விச்சிரவாவுதாய், இவளுக்குப் பிரீதியென்றும் நாமாந்தரம்.

அவீக்ஷித்து—கரந்தமன்மகன்.ஜனனகாலத்திற் கொடிய கிரகங்களால் லக்கினம் பார்க்கப் படாமையின் இப்பெயரேற்றனன்[வீக்ஷண்யம் = பார்வை.]

அவுசீநரசிபி— யயாதியின் தௌகித்திரரிலொருவன். [அக்கினி.

அவ்வியவாகனன்— (1)கிரகபதி (2)

அழகம்மை—திருமழபாடி திருக்களர் இந்தஸ்தலங்களில் உமாதேவிக்கு வழங்குந் திருநாமம்.

அழகர்மலை — பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், இது திருமாலிருஞ்சோலையென்றும் வழங்கும். இங்கே திருமால் நின்ற திருக்கோலம் புண்ணியவணம் பவகாரணம் இஷடசித்தியென மூன்று பொய்கைகளும் சிலம்பாறென்னுநதியுமுள

அழகாம்பிகை—திருநறையூரிலும் அதனையடுத்தசித்தீச்சரத்திலும் உமாதேவிக்கு வழங்கிவருந் திருநாமம்.

அழகாலமர்ந்தநாயகி--திருமாந்துறையிலே உமாதேவிதிருநாமம்.

அழகிய நாயகி—திருவெண்ணியிலுந் திருவாமாத்தூரிலும் உமாதேவியார் திருநாமம்.

அழகுசடை முடித்த நாதர்—திருக்குரங்காடுதுறையிலேஉமாதேவியார் திருநாமம்.

அழற்கணாகம்—திருஷ்டி விஷமெனும்பாம்பு. இது கண்ணில் விஷமுடையது. இதன் விழிக்கு எதிர்ப்பட்டோரிறப்பர் [மணிமே]

அழும்பில்—சோணாட்டிலுள்ளதோர் குறுநில மன்னனுக்குரிய ஊர்.

அழும்பில்வேள்—அழும்பில் நகரத்திருந்த ஒரு குறுநிலமன்னன். இவன்

செங்குட்டுவனுக்குரிய நண்பன்.

அளகாபுரி } அளகை } வடதிசைப் பாலகனான குபேரன் நகரம். யக்ஷகின்னரர்வாசஸ்தானம, இது கைலாயத்திற் கருகிலுள்ளதும் நவநிதிகளையும் தன்னிடத்துடையதுமாம்

அளர்க்கன் —குவலயாசுவன் மகன். அலர்க்கனிற் காண்க.

அஹிதாங்கன்—திரிபுரராஜ குமாரன், [சூளாமணி]

அறநெறிச்சாரம்—சங்கமருவிய நூல்களிலொன்று, இது வெண்பாக்களாலாயது. இதனை யாக்கினோர் முனைப்பாடியார்.

அறவணவடிகள்-காவிரிப்பூம்பட்டினத்துப் புத்தசங்கத்திருந்த ஒருமுனிவர். கோவலன் கொலையுண்டது கேட்டு வருந்தியடைந்த மாதவிக்குத்தருமோபதேசஞ்செய்து துன்பகற்றித் துறவுபூண்பித்தவர். பாதபங்கய மலையைத் தாந்தரிசித்ததன்றி துச்சயனென்னும் அரசனையும் அவன் மனைவியரோடு சென்றுதரிசிக்கச்செய்தவர். மணிமேகலைக்கு ஆபுத்திரன் வரலாற்றையும் அமுதசுரபியின் பெருமையையும் உணவளித்தலின் விசேடத்தையும் கூறி, பலருடைய பசித்துயரகறறச்செய்தவரன்றி, அவளை நல்வழிப்படுத்திய ஆசிரியருமிவரே. தீவதிலகையாலும், கந்திற்பாவைத தெய்வத்தாலும் மிக்கு புகழப்பெற்றவர். காவிரிப்பூம்பட்டினங் கடல்கொள்ளப்பட்ட பிறகு, வஞ்சி நகரிற்றுறவு பூண்டிருந்த கோவலன் பிதாவுடனளவளாவிப் பின்னர்க் காஞ்சிநகரமடைந்து தவத்திலிருந்தவர், இவர் பலரையும் நன்காசீர்வதிப்பதாலும் தூய்மையாலும் மேம்பாடுற்றவர்

அறவாழி—தருமசக்கரம்.

அறவிலைவாணிகன்—பொருளை விலையாகக்கொடுத்து அதற்கீடாகத்தருமத்தைக் கொள்ளும் வியாபாரி [மணிமே.]

அறிவனார்—பஞ்சமரபென்னும் நூலையியற்றிய ஆசிரியர்.

அறுகை — சேரனுக்கு நண்பனான ஒரு குறுநிலமன்னன், மோகூர்மன்னனுக்குப் பகைவன். [பதிற்றுபத்]

அறையணி நல்லூர்—சிவக்ஷேத்திரங்களிலொன்று. நடுநாட்டில் பெண்ணை நதிதீரத்திலுள்ளது.

அனந்தகுண பாண்டியன்—குலோத்துங்க பாண்டியன் மகன். இவன் அரசு செய்கையில் நாகமெய்ததும் மாயப்பசுவை வதைத்தது முதலிய திருவிளையாடல்கள் நிகழ்ந்தன.

அனந்தசுகபாண்டியன்--அனந்தகுண பாண்டியனுக்குப்பின் மதுரையையரசு செலுத்திய பாண்டியன்.

அனந்த விஜயம்—பாண்டவரில் மூத்தோனாகிய தருமனுடையவெற்றிச் சங்கம்.

அனந்தேசுரர்—ஈசுவர தத்துவத்திலுள்ள அஷ்டவித்தியே சுரரில் தலைமையானவர். இவர் [illegible]யாதத்துவ புவனங்களைப்படைக்கும் ஆற்றலுடையவர்.

அனலன்—விபீஷணன் மந்திரி.

அனலி—சூரியன்.

அனாசிருதம்—புவனங்கள் இருநூற்றுழ்ப்பத்தைந்தனுளொன்று.

அனாதிசடிலன்—சிவன்.

அனிமிட்டன்—தேவன்.

அனிலன்—அஷ்டவசுக்களி லொருவன்.

அனு—யயாதிமைந்தரு ளொருவன.

அனுமான சூத்திரம்—பௌத்த நூல்களிலொன்று, இது அனுமேயத்தினிலக்கணத்தைவிவரித்துக்கூறும்.

அனுமான்—(1) ஹனுமானிற்காண்க (2) சிற்பநூல்களில் ஒன்று.

அனுமேயம் — பிரமாண மூன்றனுளொன்று [இது பௌத்தமதகொள்கை] [ருவன்.

அனுருத்தன்—பௌத்த சீடருளொ

அனுவாதம்—முன்னர்ப் பெறப்பட்டதொன்றனை வேறொன்று விதித்தற்பொருட்டுப் பின்னரும் எடுத்தோதுவது.

அன்னபூரணி பீடம்—சத்தி பீடங்கள் அறுபத்து நான்கனுளொன்று. இது ஸ்ரீ காஞ்சியி லுள்ளது.

அன்னம்—பிரமன் வாகனமாகிய ஒரு பக்ஷி, பாலுநீருங்கலந்த விடத்து நீரைப் பிரித்துப் பாலை யுண்பது. இது நடையாற் சிறந்தது பற்றி மாதர் நடைக் குவமிக்கப்படுவது.

அன்னம்பட்டீயம்—ஒரு தருக்கநூல் தமிழில் வசன ரூபமாகவுள்ளது. இது தருக்க சங்கிரகதீபிகையென்றும் பெயருறும். தாமியற்றியதருக்க சங்கிரக வடமொழி நூற்கு உரையாகத் தெலுங்கராகிய அன்னம் பட்டரென்பவரால் வடமொழியிற் செய்யப்பட்டுப் பின்னர்த் திருவாவடுதுறைச்சிவஞானயோகிகளால் மொழிபெயர்க்கப்பட்டது.

அஷ்டகணநாதர் — சிவகணங்கட்கு அதிபரான நந்தி மாகாளர் பிருங்கி கணபதி இடபர் கந்தர், பார்வதி சண்டரெனப்படுமெண்மர்.

அஷ்டகன்—விசுவாமித்திரன் புத்திரரிலொருவன்.

அஷ்டகாதியர்—யயாதியின் புத்திரி குமாரர். அஷ்டகன் பிரதன் வசுமன் அவுசீநரசிபி என்னு நால்வர். இவர்க்கு யயாதி பலநீதிகளைப்போதித்தனன்.

அஷ்டதிக்கஜங்கள்—இந்திரதிசையாயாகிய கிழக்கு முதல் முறையேயுள்ள ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்சனம் புஷ்பதந்தம் சார்வபௌமம் சுப்பிரதீகமெனப்படுவன. இவற்றின் பிடியானைகள் முறையே அப்பிரம் கபிலை பிங்கலை அநுபமை தாமிரபருணி சுப்பிரதந்தி அங்கனை அஞ்சனாபதியென்னு மெட்டாம். இவற்றுள் முற்கூறிய திக்கஜங்கள்இந்திரன் முதலீசானனீறாயுள்ளதிக்குப்பாலகர்க்கும்அவற்றின்பிடியானைகள் அவர்கள் மனைவியர்க்கும் வாகனங்களாம்.

அஷ்டதிக்குப்பாலகர்கள்— இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானனெனப்படுவோர். இவர் கிழக்கு முதல்வடகிழக்கீறாயுள்ள எண்டிக்குகளுக்குத்தலைவர்.

அஷ்டமூர்த்தி—பவன் சர்வன் ஈசானன், பசுபதி வீமன் உக்கிரன் மகாதேவன் உருத்திர னெனப்படுமெண்மர். சிருஷ்டி கைகூடாது மயங்கிய பிரமனுக்கு அதனைக்கைகூட்டு நிமித்தம் இம்மூர்த்திகளெட்டாகச் சிவபிரானே அவன்புருவமத்தியில் அவதரித்தவர். இவ்வஷ்டமூர்த்திகளின் வடிவு முறையே நீர் நிலம் வாயு அக்கினி ஆகாயம் சுகர்மன் சோமன் சூரியனென்றும் இவர் மனைவியர்முறையே உஷை சுகேசி சிவை சுவாகா திசை

நிகைஷ்ரோகிணி சுவர்ச்சலை யென்றுங் கூறப்படுவர்.

அஷ்டவக்கிரன்--ஒரிருடி. ஏகபாதன் மகன். இவன் சுஜாதையின் கருப்பத்திலிருக்கையில், தந்தை சிஷருக்கு வேதாத்தியயனஞ்செய்து வருவதை, அவன் சிஷர் நித்திரையால் பிறழ்க்கோதக் கருப்பத்திலிருந்தாங்கு, பிதாவுக் குணர்த்தினமையின் ஏகபாதன்சினந்து 'எட்டுக்கோணலாகிய உடலோடுதிக்க' எனச்சபிக்க, அங்ஙனம்பிறந்தும்பேரழகினனாயிருந்தமையின் அரம்பையாதியர் இவனைப்பழிக்க, இவன் அவர்களைக் கள்வர்கைப்பட்டு வருந்துகவெனச் சபித்தவன். அவ்வரம்பையாதியர் கோபிகைகளாய், கண்ணன் நிரியாணமுற்றபின்னர் அர்ச்சுனன்பின் சென்று கள்வராற்றுன்புற்றனர்.

அஷ்டவசுக்கள்--அனலன் அணிலன் ஆபச்சைவன் சோமன் தரன் துருவன் பிரத்தியூசன் பிரபாசனெனப்படுமெண்மர். இவர்கள் வீசுபுத்திரர். வசிஷ்டருடைய ஓமப்பசுவையபகரித்து அவராற் சபிக்கப்பட்டுச் சந்தனு மனைவியாயிருந்த பரிமளகந்தியென்னும கங்கையின்புத்திரராகத்தோன்றினர். இவருள் ஒருவனே மிக்க அபராதியாதலின், மற்றெழுவர் சதுர்த்தாம்சங்களைப் பெற்று வீடுமனாய்த் தோன்றி, மிக்க தருமம் வென்றி பராக்கிரமங்களோடும் விளங்கினனென்பர்.

அஷ்டவித்தியேசுவரர்—அநந்தர் சூக்ஷ்மர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தி ஸ்ரீகண்டர் சிகண்டி யெனப்படுமெண்மர்.

அஷ்டாங்கசீலம்—கொல்லாமை கள்ளாமை வியபிசரியாமை பொய்கூறாமை கள்ளுண்ணாமை இரவில் தூய்மையில்லாத உணவைப் புசியாமை சந்தன முதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை தரையிற் பாய்மேலே சயனித்தலென்பனவாம். இவையில்லறத்தாரில்நிஷ்டாபரர்க்கே யுரியன என்பது தர்மிக சூத்திரமெனும் பௌத்தநூற்சம்மதம்.

அஷ்டாஷ்டலீலை—சிவமூர்த்தி பக்தாநுக்கிரக காரணமாகச் சகளீகரித்த அறுபத்து நான்கு அவசரங்கள். அவை இலிங்கம் இலிங்கோற்பவம் முகலிங்கம் சதாசிவம் மகாசதாசிவம் உமாமகேசம் சுகாசனம் உமேசம்சோமாஸ்கந்தம் சந்திரசேகரம் ருஷபாரூடம் ருஷபாந்திகம் புஜங்கலளிதம் புஜங்கத்திராசம் சந்தியாநிருத்தம் சதாநிருத்தம் காளிதாண்டவம் கங்காதரம் கங்காவிஸர்ஜனம் திரிபுராந்தகம் கல்யாணசுந்தரம் அர்த்தநாரீசுவரம் கஜயுத்தம் ஜ்வராபக்நம் சார்த்தூலஹரம் பாசுபதம் கங்காளம் கேசவார்த்தம் பிக்ஷாடனம் சிம்ஹக்நம் சண்டேசாநுக்கிரகம் தக்ஷிணாமூர்த்தம் யோகதக்ஷிணாமூர்த்தம் வீணாதக்ஷிணாமூர்த்தம் காலாந்தகம் காமதகனம் இலகுளேசம் பைரவம் ஆபதோத்தாரணம் வடுகம் க்ஷேத்திரபாலகம் வீரபத்திரம் அகோராஸ்திரம் தக்ஷசங்காரம் கிராதம் குருமூர்த்தி அசுவாரூடம் கஜாந்திகம் ஜலந்தரவதம் ஏகபாதத்திரிமூர்த்தம் திரிபாதத்திரிமூர்த்தம் ஏகபாதமூர்த்தம் கௌரீவரப்ரதம் சக்ரதானஸ்வரூபம் கௌரீ

தீலாணமந்த்விதம் விஷாபஹரணம் சுருடாந்திகம் பிரமசிரச்சேதம் கூர்மாரி மச்சாரி வராஹாரி பிரார்த்தனமூர்த்தம் ரக்தபிக்ஷாபிரதானம் சிஷ்யபாவ மெனப்படும். இவற்றின் விரிவைத் தமிழிற் கூறுவது அஷ்டாஷ்டமூர்த்தங்க ளென்னும் சிவபராக்கிரமம்.

அஷ்டோத்தரசதோபநிஷத்—அநந்தமாகிய வேதங்களிற் றிரட்டிய ருக் யஜுஸ் சாமம் அதர்வமெனும் சதுர் வேதங்களி னின்றும் அவற்றின் சிகையாக விளங்கும் நூற்றெட் டுபநிடதங்கள். இவை பிரமவித்தையை விளக்கிக்கூறுவன. அவை ஈச கேந கட பிரஸ்ந முண்டக மாண்டூக்ய தைத்திரிய ஐதரேய சாந்தோக்ய பிருகதாரணய பிரஹ்ம கைவல்ய ஜாபால ஶ்வேதாஶ்வதர ஹம்ஸ ஆருணிக கற்ப நாராயண பரமஹம்ஸ அம்ருதபிந்து அம்ருதநாத அதர்வசிர அதர்வசிகை மைத்திராயண்ய கௌஷீதகீ பிருஹஜ்ஜாபால ந்ருஸிம்ஹதபந காலாக்நிருத்ர மைத்திரேய ஸுபால க்ஷுரிக மந்திரிக ஸர்வஸார நிராலம்ப சுகரஹஸ்ய வஜ்ரசூசி தேஜோபிந்து நாதபிந்து தியானபிந்து பிரஹ்மவித்ய யோகதத்வ ஆத்மபோத நாரதபரிவ்ராஜக த்ரிசிகீப்ரஹ்மண ஸீதா யோகசூடாமணி நிர்வாண மண்டலபராஹ்மண தக்ஷிணாமூர்த்தி சரப ஸ்கந்த த்ரிபாதவிபூதி அத்யயதாரக ராமரஹஸ்ய ராமதபந வாசுதேவ முத்கல சாண்டில்ய பிங்கள பிக்ஷுக மஹ ஶாரீரக யோகஶிக துரியாதீத சந்நியாச பரமஹம்ச அக்ஷமாலிக அவ்யக்த ஏகாக்ஷர அன்னபூர்ணி ஸூரிய அக்ஷிய அத்யாத்ம குண்டிக ஸாவித்ரி ஆத்ம பாசுபதப்ரஹ்ம பரப்பிரஹ்ம அவதூத த்ரிபுரதபந தேவி திரிபுர கர பாவந ருத்ரஹ்ருதய யோககுண்டலி பஸ்மஜாபால ருத்ராக்ஷஜாபால கணபதி தர்ஸந தாரஸார மஹாவாக்ய பஞ்சப்ரஹ்ம ப்ராணாக்கினி கோபாலதபந க்ருஷ்ண யாக்ஞவல்க்ய வராஹ ஶாட்யாயந ஹயக்கிரீவ தத்தாத்திரேய காருட கலிஸந்தரண ஜாபாலி ஸௌபாக்கியலக்ஷ்மி ஸரஸ்வதீரஹஸ்யபஹ்வ்ரத முக்திகோபநிஷதங்க ளெனப்பெயர் பெறும்.

இவற்றுள், சுவேதாசுவதரம் கைவல்யம் காலாக்நிருத்ரம் அதர்வசிரசு அதர்வசிகை யெனப் படுமைந்தும் வைதிக சைவத்தை இனிது விளக்கலின் பஞ்சருத்திரோபநிடதமெனப்படும்.

இராமதபநம் கோபாலதபனம் நரசிம்மதபநம் ஹயக்கிரீவம் மஹாநாராயண மெனப்படு மைந்தும் வைஷ்ணவ சித்தாந்தமாகிய விசிஷ்டாத்வைதத்தை விளக்கலின் பஞ்சதபநோபநிடதமெனப்படும்.

ஈசாவாசியம் கேனம் கடவல்லி பிரஸ்நம் முண்டகம் மாண்டூக்யம் தைத்திரீயம ஐதரேயம் சாந்தோக்கியம் பிருஹதாரண்யக மெனப்படும்பத்தும் தசோபநிடதமெனப்படும், இப்பத்துபநிடதங்கட்கும், ஆதிசங்கராசாரியர் ஏகான்மவாதபட்சமாக வடமொழி (வசன) விருத்தியுரையாகிய பாஷியஞ் செய்துவைத்தனர். ஆயினும் தைத்திரீயோபநிஷத்தின சிக்ஷாவல்லி ஆ

நந்தவல்லி பிருகு வல்லிகட்குமாத்திரம் பாஷியமெழுதி நாராயண வல்லிக்கு எழுதாமல் விட்டுவிட்டனர். வைணவரில் ரங்கராமாநுஜர் விசிஷ்டாத்வைத பாஷியமும், மத்துவாசாரியர் துவித வைணவ பாஷியமுஞ் செய்துளர்.

சங்கரர் காலத்தில் விருத்தராயிருந்த நீலகண்ட ரெனப்படும் ஸ்ரீ கண்டாசாரியார் வேதாந்த சூத்திரத்திற் கெழுதிய சைவபாஷியத்திற்கைவல்யாதி யுபநிடதங்களோடு இப்பத்துபநிடதங்களையு மெடுத்து மேற்கோள் காட்டியுளர். இராமாநுஜாசாரியர் அச் சூத்திரத்திற் கெழுதிய விசிஷ்டாத்வைத பாஷ்யத்திலும், ஆநந்ததீர்த்த ரெனும் மத்துவாசாரிய ரெழுதிய துவித வைணவ பாஷியத்திலும் பத்துபநிடதங்களையு மொப்பி யெழுதினர். இத்தகைய காரணங்களால் தசோப நிஷத்துக்களே முக்கியமான உபநிஷத்துகளென்பது ஒரு சாரரர் கொள்கை. பாஷியஞ்செய்தோர் ஒப்புக்கொண்டதே பிரமாணமாகாது. அன்றென்று, சைவர் அப்பத்தினைப் பிரமாணமாகக் கொள்ளின் வைதிக சைவத்தையினிது விளக்குகின்ற பஞ்சருத்திரோபநிடதங்களையும், சிவமகிமைகளையுஞ் சிவசின்னங்களையும் பிரதிபாதிக்கின்ற ஏனைய உபநிடதங்களையு மிழந்து போலிச்சைவராவர். வைணவர் அப்பத்தினையேபிரமாணமாகக் கொள்ளின் வைணவத்தையினிது விளக்கும் பஞ்ச தபனோபநிடதங்களை யிழந்து போலி வைணவராவர். ஏகான்மவாதிகள் அப்பத்தே பிரமாணமெனின் அசற்றித் கூறப்படாத ரஜ்ஜு ஸர்ப்பம் சந்திகா ரஜித முதலிய (தமதுசமய)உபமானங்களை விளக்குகின்ற உபநிடதங்களையும் ஏனைய உபநிடதங்களையுமிழந்து போலி ஏகான்ம வாதிகளாவர்களென்றறிக.

இங்ஙனம் பத்துபநிடதங்களே முக்கியப பிரமாணமென்றும் ஏனைய உபநிடதங்கள் அமுக்யப் பிரமாணமென்றும் வேததிலாவது வேதாந்ததிலாவது பிரஸ்தாபிக்கப்படவில்லை முக்தி கோபநிஷத்தில் "பத்துபநிஷத்துக்களை நீபடி" எனப் பொருளாதலுண்டே யெனக் கூறுவார்க்கு, "மோக்ஷாபேக்ஷையுடையார்க்கு மாண்டூக்யோபநிஷத் தொன்று போதும். அவ்வளவில் ஞானமுண்டாகாவிடின், பத்துபநிஷத்துக்களை நீபடி, அவ்வாறு படித்தும் விஞ்ஞானதார்ட்டிய மேற்படாவிடின் முப்பத்திரண் டுபநிஷத்துகளை நன்கு அப்பியாசஞ் செய், மேலே விதேகமுத்தி வேண்டுமாயின் நூற்றெட்டுபநிஷத்தும் படி" என்னும் பொருளுங் காணப்படுதலால் அப்பத்தே படிக்கவேண்டுவதும் முக்கியப் பிரமாணமாவதும் கூடாமைகாண்க.

இன்னும முப்பத்திரண்டுபநிஷத்துகளே பிரமாணமெனவாருமுளர். அவையெல்லாம் பொருந்தா. அவை விரிப்பிற்பெருகும்.

அஸ்தாமலகாசாரியர்—பிரபாகரர்புத்திரர். சங்கராசாரியர் மாணாக்கர்.

அஸ்தி—(1) அஸ்தினபுரம் நிருபித்த ஓரரசன் (2) சராசந்தன்மகள், கம்சன் மனைவியருளொருத்தி.

அஸ்திரஹ்ருதயம்--சத்துருநாசத்தையும் கீர்த்தியையும் உண்டுசெய்ய வல்லதோர் அரியவித்தை. இதுசிவ பெருமானிடத்தில் சுவாயம்பு மனுவும், அவரிடத்தில் வசிட்டரும், அவரிடத்தில் சித்திராயுதனெனுங் கந்தர்வனும், அவனிடத்தில் அவனது தௌகித்திரியாகிய மனோரமையும், அவளிடத்தில் சுவரோசுவும் உபதேசிக்கப் பெற்றது. இது சுவரோசிஷமனுசம்பவததிற் கூறப்பட்ட விஷயம.

அஸ்தீகன்—ஒரு முனிவன் ஜரத்காரன்மகன், இவன்தாய்வாசுகியென்னும் நாகராஜன் தங்கையான ஜரத்காரி. ஜனமேஜயசர்ப்பயாகததிற் கஞ்சிவந்த தக்ஷகன் இந்திரனிடம் அடைக்கலம் புக்கிருப்ப, யாகத்தின் மந்திர பலத்தால் தக்ஷகனை இந்திரனோடீர்ப்ப, தக்ஷகன் வேண்டுகோளால் ஜனமேஜயனைப் பிரார்த்தித்து உயிர்காத்துக் கொடுத்த புண்ணிய புருஷன்.

அஸ்வஹ்ருதயம்—குதிரைகளின் இதயத்தையறியத்தக்கதோர்வித்தை. இதில் நளனும்நகுலனும்வல்லவர்களென்று சொல்லப் பட்டவர்கள். இவ்வித்தியாபலத்தினாலேயே நளன் இருதுபன்னனை அயோத்தியிலிருந்து விதர்ப்பநாட்டிற்கு ஒரேதினத்திற்கொண்டு சென்றனன்.

## ஆ

ஆகமங்கள்—வேதத்தைப் போலவே அதற்குச்சமமாகக் கடவுளால் அருளிச்செய்யப்பட்டதந்திரங்கள். அவை சிவாகமமெனவும் வைணவாகம மெனவும் இருவகை. அவற்றுள், சிவாகமங்கள் சதாசிவமூர்த்தி ஈசான தற்புருஷ அகோர வாமதேவ சத்தியோஜாதமென்னும் ஐந்து திருமுகங்களுட னியைந்து எழுந்தருளி ஆன்மாக்களின் பாசச்சேதநிமித்தம் சித்தாந்தமாகிய காருடம் வாமம் பூததந்திரம் பைரவமீருகிய ஆகமபேதங்களை ஈசானமொழிந்த நான்கு திருமுகங்களினின்றும், இருபத்தெட் டாகமங்களை ஈசானமுகத்தினின்றும் அருளிச் செய்தனர். என்ப.

சிவாகமங்கள்—காமிகம் யோகசம் சிந்தியம் காரணம் அசிதம் தீப்தம் சூக்ஷமம் ஸஹஸ்ரம் அஞ்சுமான் சுப்பிரபேதம் விஜயம் நிஸ்வாசம் ஸ்வயம்பூதம் ஆக்கேயம் வீரம் ரௌரவம் மகுடம் விமலம் சந்தாஞானம் முகபிம்பம் புரோத்கீதம் லலிதம் சித்தம் சந்தானம் சர்வோத்தமம் பாரமேச்சுரம் கிரணம் வாதுளமென்பன. இச்சிவாகமங்களில் முதலிற்கூறிய பத்தும் சிவபேதங்களாம். ஏனையபதினெட்டும் உருத்திரபேதங்களாம். இச்சிவாகமங்களிருபத்தெட்டும் வக்த்ராரம் முதல் விசுவாத்மகமீருயுள்ள இருநூற்றெட்டுட்பிரிவுடையன

ஈசான முகத்தினின்று சிவாகமங்களுதித்தன வென்பதன்றியும், காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அசிதமென்னு மைந்தையும் சத்தியோஜாதமுகத்தினின்றுகௌசிகவிருடியின் பொருட்டும், தீப்தம் சூக்குமம் ஸஹஸ்ரம் அஞ்சுமான் சுப்பிரபேதமென்னு மைந்தையும் வாமதேவமுகத்தி னின்று காசிபவிருடியின் பொருட்டும், விஜ

யம் நிசுவாசம் சுவாயம்புவம் ஆக்கிநேயம் வீரமென்னு மைந்தையும் அகோரமுகத்தினின்று பாரத்துவாசவிருடியின் பொருட்டுமே, ரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் முகவிம்பமெனு மைந்தையுந் தற்புருட முகத்தினின்று கௌதமவிருடியின் பொருட்டும், புரோற்கீதம் லளிதம் சித்தம் சந்தானம் சர்வோத்தமம் பாரமேசுவரம் கிரணம் வாதுள மென்னு மெட்டையும் ஈசான முகத்தினின்று அகத்திய விருடியின் பொருட்டும் அருளிச்செய்தன ரென்றும் நூல்கள் கூறும்.

இவ்வாகமங்கள் இறைவனுடைய திருவடி திருமுகம் குண்டலம் பரிவட்ட முதலியனவாக விளங்கும். இவை யொவ்வொன்றுக்குமுள்ள உபபேதங்கள் கிரந்தசங்கியை முதலியவற்றை அவ்வவற்றின்வரிவடிவிற் கண்டுகொள்க.

ஆகமமென்னு மொழியில் ஆ என்பது ஞானமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மலநாசமுமாம். ஆகவே ஆன்மாக்கட்கு மலத்தை நசிப்பித்து ஞானத்தையுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுத்தலால் ஆகமமெனப் பெயராயிற்று. வேதமும் ஆகமமும் இறைவனுலேயே யருளிச்செய்யப் பட்டமையின் அவை தம்முட் சிறிதும் பேதமின்றி இயலுந்தன்மையன. இதனை "வயந்து வேதபரிவாகம யோர்ப்பேதம் நபஶ்யாமஃ வேதோபிபரிவாகமஃ" வேதசிவாகமங்கட்குப் பேதங்காண்கிலேம்—என்ற ஸ்ரீகண்டாசாரியர்வசனத்தாலும், "வேதமொடாகம மெய்யாமிறைநூல்-ஓதும்பொதுவுஞ் சிறப்புமென்றுன்னுக-நாதனருளவை நாடிவிரண்டந்தம் - பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"—என்னும் திருமந்திரத்தாலும் அறிக. ஆகமங்கள் தேவதார்ச்சனை, ஆலயப் பிரதிஷ்டை முதலிய விதிகளைக் கூறும்.

இனி இவ்வாகமங்கள் ஒவ்வொன்றும் ஞான யோக கிரியை சரியைகளை யுணர்த்தும் நான்கு பாதங்களை யுடையன. அவற்றுள் ஞானபாதம் பதிபாசுபாச மென்னும்திரிபதார்த்த ஸ்வரூபத்தைப் பற்றிககூறும். யோகபாதம்பிராணயாமாதி அஷ்டாங்கயோக விலக்கணங்கூறும். கிரியாபாதம் மந்திரங்கள் ஜபஹோம சந்தியாதிகளையும் சமயவிசேஷ நிர்வாண தீக்ஷைகளையும் கூறும். சரியாபாதம் பிராயச்சித்தம் சிராத்தம் சிவலிங்க விலக்கண முதலியன கூறும்.

வைணவாகமங்கள்—வைகானசம் பாஞ்சராத்திர மென்றிரண்டு. அவற்றினைப்பற்றி அவ்வவற்றின் வரிவடிவிற் கண்டுகொள்க.

ஆகா—ஒரு கந்தர்வன். இவன் பெயரை வடநூலார் ஹாஹா வென்பர்.

ஆகாசம்—சிவபிரானது அஷ்டமூர்த்தங்களிலொன்று.

ஆகாயகங்கை—தேவலோகத்தி லுள்ள கங்கை.

ஆகாயவாசிகள்—பதினெட்டு வகைத் தேவசாதியருளொருசாரார்.

ஆகாயவாணி—கர்மசாக்ஷியாக அந்தரத்தினிற்கும் அரூபியானஒருசக்தி. ஆபத்திலிருப்போர் வேண்டுகோ

ளுக்கிரங்கிஒலிமாத்திரையாய்அவ்
வமயத்திற் சாக்ஷியங்கூறியது.

ஆகுகன்—(1) தேவகன் பிதா (2) அற்புதகிரியில் வசித்திருந்த ஒரு வேடன். இவன் மனைவி ஆகுகி. இவர்க ளிருவருந் தங்களிருக்கைக்கருகிலுள்ள ஒரு சிவாலயத்தை யடைந்து நாடோறுஞ் சிவதரிசனஞ்செய்து வருவது வழக்கம். அவ்வாறிருப்ப,ஒருநாள் அங்கடைந்த ஒரு யோகியைக்கண் டுபசரித்து யாது வேண்டுமென வேண்ட, இரவிற்றங்குவதற்கு இடமன்றி வேறொன்றும் வேண்டாமென, ஆகுகன் அவரைத்தன் குடிசையிலிருக்கச்செய்ய, அவர் பெண்பாலை யிரவில் வெளியே யிருத்தல் அடாதென, அவளையும் உள்ளே யிருத்தி வில்லும் அம்புங்கொண்டு வெளியேகாத்திருந்தான். யோகி சிவயோகத்திருந்தனர். ஆகுகி உறங்கினள். ஆகுகன் புலியாற் கொல்லப்பட்டான. விடிந்தவுடனே ஆகுகி நிகழ்ந்தமையறிந்து யோகிபால்விடைகொண்டு தன்கணவனுடன் தீயிற்பாய்ந்துயிர்துறந்தனள். அப்பொழுது சிவபெருமான் கொடுத்த வரத்தால் ஆகுகன் நளராசனாகவும், ஆகுகி தமயந்தியாகவும், யோகி அன்னமாகவுந் தோன்றி அதனோடு பிறவியை யொழித்து மூவரும் முத்தி யடைந்தார்கள்.

ஆகுகி—(1) தேவகன் மாதலி (2) ஆகுகன் மனைவி.

ஆகுவாகனன்—கணபதி. [பெருச்சாளியை வாகனமாகக்கொண்டவர்] கயமுகாசுரன் இறவாவரம் பெற்றவனாய்த் தேவரைத் துன்புசெய்ய அவர்கள் பிரார்த்தனைக் கிரங்கி அவனை யெதிர்த்துப் போர்புரிகையில், இறவாவரம் பெற்றவனாதலின் மாயாரூபங்க ளெடுத்துப் போர் செய்து பெருச்சாளியாக வர, அதன்மீதேறி வாகனமாகக் கொண்டவர்.இவ்வசுரன் வரலாறு கஜமுகாசுரனிற் காண்க.

ஆகூதி—(1) ஸர்வதேஜசன் மனைவி, சட்சுர்மனுவையீன்றவள். (2)சுவாயம்புமனுவுக்குச்சதரூபையென்பாளிடம் பிறந்தமகள். இவள் பிரஜாபதியை மணந்து யஜ்ஞனெனும் மகனையும், தக்ஷிணையெனு மகளையும் பெற்றவள்.

ஆக்கிநீதரன்—பிரியவிரதன் மனைவி சுகன்னிகை யென்பாள் பெற்ற பதினொருபுத்திரருள் மூத்தோன். இவன் மனைவி பூர்வசித். இவனுக்குத் தந்தையாற் கிடைத்த சம்புத்தீபத்தைத் தனது புத்திரர் ஒன்பதின்மருக்கும் பிரித்துக்கொடுத்தவன். இமயமலையின் தெற்கிலுள்ள பரதகண்டத்தை நாபியென்பவனுக்கும், பரத கண்டத்தின் வடக்கிலும் ஏமகூட பர்வதத்தின் தெற்கிலுமுள்ள கண்டத்தைக் கிம்புருடனுக்கும், ஏமகூடத்தின்வடக்கிலும் நிடதபர்வதத்திற்குத் தெற்கிலுமுள்ள நைஷதத்தை அரியென்பவனுக்கும், நிஷதபர்வதத்திற்கு வடக்கும் மேருவைநடுவேகொண்டதுமான கண்டத்தை இலாவிருதனுக்கும், இலாவிருதகண்டத்திற்கும் நீலாசலத்திற்கும் இடையிலுள்ள கண்டத்தை ரம்மியனுக்கும், ரம்மியகண்டத்திற்கு வடக்கே சுவேதபர்வதத்திற் கிப்பாலுள்

ள கண்டத்தை இரணவந்தனனுக்கும், சுவேதபர்வதத்திற்கு வடக்கே சிருங்கவந்தத்தாற் சூழப்பட்ட கண்டத்தைக் குருவென்பவனுக்கும், மேருவின் கிழக்கேயுள்ள கண்டத்தைப் பத்திராசுவனுக்கும், மேருவின் மேற்கிலுள்ள கண்டத்தைக் கேதுமாலனுக்கு மாகப் பகிர்ந்தவன். இதனுல் இவை நவகண்டங்கள் [ ஒன்பது கண்டங்கள் ] எனப்பெயர் பெற்றன. இம்முறை மாறியுஞ் சிற்சில புராணங்கள் கூறும்.

ஆக்கிநேயபுராணம்—பதினெண்புராணங்களுளொன்று. இது பிருகு முனிவராற் சொல்லியது. அக்கினிகாரியங்களை விரித்துரைக்கும். இதற்கு அக்கினிபுராண மென்றும் நாமாந்தரம்.

ஆக்கிநேயம் – சிவாகமங்கள் இருபத்தெட்டனுளொன்று. இது சிவபிரான் திருவிழியும்,ஒரே உபபேதமும், முப்பதினுயிரங் கிரந்தங்களுமாகவுள்ளது.

ஆங்கிரசன்—பிரம மானச புத்திருளொருவன், இவனைப்பற்றிய விடயங்கள் பிருகற்பதியிற் கண்டு கொள்க.

ஆசவபாண்டேசுரன்--ஒரு க்ஷேத்ரதேவதை. அது காசியிலுளதென்றும், அதனை யுபாசித்து வந்த ஒரு கள் விலைஞனுக்கும் அவன் மனைவிக்கும் கட்குடத்திருந்து அநுக்கிரகித்த தென்றும் கதையொன்று கர்ணபரம் பரையிற் கேள்வி.

ஆசாரகாண்டம்—விஜ்ஞாநேசுவரீய மென்னும் தர்மசாஸ்திரத்தின் ஒரு காண்டம். இதில் நான்கு வருணத்தவர்களும் அநுசரிக்கவேண்டிய தருமங்கள் கூறப்பட்டன. பிராமணருக்கு யஜனம் யாஜனம் அத்தியயனம் அத்தியாபனம் தானம் பிரதிக்ரஹமென்னும் ஆறுதொழில்களும், க்ஷத்திரியருக்குப் பிரஜா பாலனம் தானம் யாகம் வேதாத்தியயனமும், வைசியருக்குப் பசுக்காத்தல் தானம் யாகம் வேதாத்தியயனம் நீரிலுநிலத்திலு முண்டாகும் தானிய ரத்தினங்களின் வியாபாரம் வட்டிவாங்கல் பயிர் செய்தல்களும், சூத்திரனுக்குமேற் கூறியமூன்று வருணத்தாருக்கும் பணிசெய்தலும் முக்கியமான தருமங்களாகச் சொல்லப்பட்டுள்ளன.

வேதமந்திரத்தாலும் கர்ப்பாதான மந்திரத்தாலும் சேர்ந்த ஹோமத்தாலும் ஜாதகர்மம் நாமகரணம் அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் முதலிய கர்மங்களாலும் துவிஜர்களுக்கு மாத்திரம் சர்ப்பவீஜஸாதிதோஷநீங்கும். கொப்பூழறுப்பதன் முன்னர் ஆண் மக்களுக்கு ஜாதகர்ம மென்னுஞ் சம்ஸ்காரஞ் செய்யப்பட வேண்டும். [ஜாதகர்மம்=பிறந்ததைக்குறித்துச் சிசுவுக்குச் செய்யப்படுவதொன்று.] பிறந்த பத்தாந்தினமாவது பன்னிரண்டாந்தினமாவது புண்ணிய திதியில் சுபமுகூர்த்த சுப நக்ஷத்திரத்தில் குழந்தைக்கு நாமகரணமும், நான்காமாதத்திற் சூரியதரிசனமும், ஐந்தாமாதத்திற் சந்திரதரிசனமும்,ஆறுமாதத்தில் அன்னப்பிராசனமும் செய்யப்படவேண்டும். ஒரு வருடத்தின்மேலும் மூன்றுவருடங்களின் மேலும் வே

தோக்தமாகச் சௌளக்கிரியை செய்யத்தகும். வேதியனுக்குஎட்டு வயதினுள்ளும் அரசனுக்குப் பதினொருவயதினுள்ளும வைசியனுக்குப் பன்னிருவயதினுள்ளும் உபநயனஞ் செய்விக்கவேண்டும். தவறினால் வேதியருக்குப் பதினாறு அரசர்க்கு இருபத்திரண்டு வைசியர்க்கு இருபத்துநான்கு வருடங்கட்குள் செய்விக்கலாம். பின் குறித்தகாலத்தினுள்ளும் உபநயனஞ் செயயப் பெறாதவன் துவிஜனாகமாட்டான். அப்படிப்பட்டவன் காயத்திரி மந்திர ஜபஞ்செய்தற்கு அருகனல்லாது விராததியனாகிறான். அத்தலைகயினர் வைதிக கருமங்கட்கு உபயோகமில்லாதவர்கள். அன்னவருடன் கொள்ளல்கொடுக்கல் முதலிய சம்பந்தங்கள் செய்யப்படா என இத்தகைய விடயங்களை மிகவும்விரித்துக்கூறுவது.

ஆசாரக்கோவை—சங்கமருவிய பதினெண் கீழ்க்கணக்கினு ளொன்று. இந்நூலைச்செய்தவர் பெருவாயின் முள்ளியாசிரியர். இவர் "ஆரெயின் மூன்று மழித்தா னடிபோற்றி" எனக்கூறியகாப்புச்செய்யுளானே சைவரென் றறிதற்குரியர். இது நேரிசை யின்னிசை சிந்தியல் முதலிய பலவகைப்பட்ட (காப்புச்செய்யுளோடு) நூற்றொருவெண்பாக்களை யுடையது. இதற்குப்பழைய தோருரையுண்டு. அது நச்சினார்க்கினிய ருரையென்ப.

ஆசிரிதன்—துஷ்யந்தன் பௌத்திரன். இவனுக்குப் பாண்டியன் சோழன் கேரளனென்னு மூன்று புத்திரருளர். இவர்கள் வெவ்வேறு வமிசத்தர்களாய்த்தங்கடங்கள் மரபினைப்பெருக்கி வாழ்ந்தவர்கள்.

ஆசிரியர் நல்லந்துவனார் — கலித்தொகை நூல்செய்தவர். கடைச்சங்கப்புலவரு ளொருவர். கலித்தொகையிற் காண்க.

ஆசீவகவாதம்—சமணசமயப் பாகுபாடுகளிரண்டனுளொன்று.

ஆசீவகன்—அருகனே தெய்வமென்பவன்.

ஆசுவலாயனன்—ஒரிருடி; இருக்வேத விஹிதமான கர்மங்களைப்பற்றிச் சூத்திரஞ் செய்தவன். இவனாற் செய்யப்பட்டது ஆசுவலாயன சூத்திரமென்ப.

ஆசூரிப்பிள்ளை—வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

ஆசௌசம்—இருவகைத் தீட்டுகள். அவை ஜாதாசௌசம் மிருதாசௌசமென்பன. ஜாதாசௌசத்தை விருத்தியினாலுண்டாந் தீட்டு என்று சொல்லுவதுமுண்டு. பிதிர் முதலிய சபிண்டர்களிறப்பின் வேதியருக்குப் பத்துத்தினங்களும், அரசர்க்குப் பன்னிருதினங்களும், வசியர்க்குப் பதினைந்துதினங்களும், சூத்திரர்க்கு முப்பதுதினங்களும் ஆசௌசமாம். குடுமிவைக்கு முன்னிறக்கும் சிசுக்கட்கு ஒருநாள் ஆசௌசமும், குடுமிவைத்தபின் னிறப்பனவற்றிற்கு மூன்றுதின ஆசௌசமு முண்டு. ஜனனாசௌசமும் மேற்கூறிய வகையே யவ்வவ் வருணத்திற்கேற்றபடி கொள்க.

ஆச்சிரமங்கள்—பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ்தம் ஸந்யாஸமெனப்படும் நான்குமாம்.